# செந்தமிழ்ச் செல்வி


KOVALOOR ANBAVAN LIBRARY, KOVALOOR
3893

உள்ளுறை



சிலம்பு-௩க] வள்ளுவர் ஆண்டு உ00ரு, ஆவணி ( Sep '74) [பரல்-க

# ‘செந்தமிழ்ச் செல்வி’

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்


க. டாக்டர் ந. சஞ்சீவி, எம். ஏ., பி.எச்டி.
தமிழ்த்துறைத்தலைவர், சென்னைப் பல்கலைக்கழகம்

உ. ‘சித்தாந்த கலாநிதி’, உரைவேந்தர்,
ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், மதுரை

௩. திரு. கொண்டல், சு. மகாதேவன் அவர்கள், எம். ஏ., பி. எஸ்ஸி
இயக்குநர், தமிழகவரசு தமிழ் வளர்ச்சித்துறை.

௪ செஞ்சொற்கொண்டல், வித்துவான்,
டாக்டர் சொ. சிங்காரவேலன், எம்.ஏ., டிப். லிங்
அ. வ. அ. கல்லூரி, மாயூரம்.

௫. செந்தமிழ்க் கலைமணி, வித்துவான்,
பண்டித, கா. பொ. இரத்தினம் அவர்கள்,
பி.ஏ. (ஆனர்சு), (லண்டன்) எம்.ஏ., பி.ஓ.எல். (சென்னை)
கொழும்பு.

௬. புலவர் இரா. இளங்குமரன்,
திருநகர், மதுரை-6.

௭. திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிப்.
நூலகர், மறைமலையடிகள் நூல்நிலையம், சென்னை


---


## கழகவழி வெளிவந்துள்ள வாழ்க்கை வரலாறுகள்

மறைமலையடிகள் வரலாறு
—புலவர் அரசு 4 00
கவிமணி ,, 2 50
டாக்டர் சண்முகஞ் செட்டியார் ,, 2 00
திரு வி.கலியாணசுந்தரனர் 4 50
உலகப் பெருங்கவிஞர் இரவீந்திரநாததாகுர் ,, 2 00
டாக்டர் சேதுப்பிள்ளை
—அ.க நவநீதகிருட்டிணன் 5 00
பண்டிதமணி
—பொ. வே சோ. 2 00
பேராசிரியர் கா. சு. பிள்ளை 1 50
தமிழ் நாட்டு வள்ளல்கள் (II) 4 00
திரு. வி. க வாழ்க்கைக் குறிப்புக்கள் (2 பகுதி) 22 50
உரிமையின் பரிசு (தொகுப்பு) 5 50
உலகப் பேரொளி நேரு 10 00
கோபாலகிருஷ்ண கோகலே
—மா. ச. சு. 2 00
லால்பகதூர் ,, 2 50
முதற்குடியரசுத் தலைவர் 1 50
முதலமைச்சர் காமராசர் 1 50
அண்ணல் ஆபிரகாம்—
புலவர் இரா. இளங்குமரன் 3 00
அரசியல் தலைவர் ஐவர் 6 00
விடுதலைக்குழைத்த வீரர்கள் 4 00
விடுதலை வீரர்கள் ஐவர் (கவிதைத் தொகுப்பு)
தலைவர்: மாண்புமிகு கலைஞர் மு. கருணாநிதி 1 75

Vol. XLIX 1974—75

ACC. NO. 38093.
66-3




The South India Saiva Siddhanta Works

All Rights Reserved] Publishing Society, Tinnevelly, Ltd.,

Madras-1, Tirunelveli-6. Madurai-1. Coimbatore-1, Kumbakonam Trichirappalli-2.

66-3

# உள்ளுறை

---

# படங்கள்

மதுரைப் பல்கலைக் கழகம் — கo௫

(1) டாக்டர், நாவலர் இரா. நெடுஞ்செழியன்; டாக்டர், கலைஞர் மு. கருணாநிதி; தமிழக ஆளுநர் கே. கே. ஷா, டாக்டர் மு. வரதராசனார்.

(2) டாக்டர். மு. வ. கலந்து கொண்ட கடைசி நிகழ்ச்சி : நடுவண் அரசு கல்வி அமைச்சர் மாண்புமிகு நூருல் அசனுக்கு 'டாக்டர்' பட்டம் வழங்கல்.

தமிழ் இசைச் சங்கம், சென்னை — உகள

(1) சர். ஆர். கே. சண்முகஞ் செட்டியார் திருவுருவச்சிலை திறப்பு 20-12-1974 திறப்பாளர் : திரு. தி. மு. நாராயண சாமி பிள்ளையவர்கள். வரவேற்புரை : செட்டி நாட்டரசர் டாக்டர் சர் முத்தையா செட்டியார் அவர்கள்

(2) தமிழ் இசை முப்பத்திரண்டாம் விழா 21-12-1974 தொடக்கவுரை : உயர்நீதிமன்ற நடுவர் மாண்புமிகு எம். எம். இஸ்மாயில் அவர்கள்

(3) தமிழ் இசைச் சங்கம் பண் ஆராய்ச்சியின் வெள்ளிவிழா 22-12-1974 தொடக்கவுரை: உயர்நீதிமன்ற நடுவர் எஸ். மகராசன் அவர்கள். விழாத்தலைவர் : இசைப் பேரறிஞர் திருவீழிமிழலை எஸ். சுப்பிரமணியபிள்ளை யவர்கள்

திருநெல்வேலி, குமரகுருபரர் குழந்தைப் பள்ளி

7-வது ஆண்டு விழா — உகள

(1) தலைவர் : சார்புதுணை நடுவர் தே. பா. சு. பழனிசாமி அவர்கள் வரவேற்பு : கழக ஆட்சியாளர் வ. சுப்பையா

27-1-1975இல் குணசீலத்தில் நடைபெற்ற செல்வன் இரகுபதி-செல்வி சுகுணா திருமணத்தின்போது செட்டி நாட்டரசர் டாக்டர் இராசாசர் முத்தையா செட்டியாரவர் களும், திவான்பகதூர் தி. மு. நாராயணசாமி பிள்ளை அவர்களும் வந்திருந்து மணமக்களை வாழ்த்தியருளினர் உளக

'மழை வேண்டல்' வழிபாடு (9-3-75) ௩௭ள்

(1) வள்ளலார் மண்டபத்தில் வழிபாடு நடைபெற்ற காலை ஓதுவார்களும் கழக ஆட்சியாளரும்

(2) அன்று மாலை 'மழையே வா' என்ற நூலை வெளியிட்டு உயர்நீதிமன்ற நடுவர் எஸ். மகாராசன் அவர்கள் உரையாற்றுதல்

தமிழர் சமய இலக்கியப் பேழை வெளியீட்டு விழா (29-4-75) ௪௬௪

(1) உயர்நீதிமன்ற நடுவர் மாண்பமை கிருட்டிணசாமி ரெட்டியார் தலைமையுரை ஆற்றுகையில் தவத்திரு அடிகளாரும் மாண்புமிகு அமைச்சரவர்களும் உன்னிப்பாகக் கேட்டல்

(2) தவத்திரு அடிகளார் நடுவர் அவர்களிடம் பெறுதல்

முன்னுள் குடியரசுத் தலைவர் மாண்புமிகு டாக்டர் எஸ். இராதா கிருட்டிணன் ௪௬௫

மொழியியல் கோடைப் பயிற்சி நிறைவு விழா (7-6-75) ௫௨௧

(1) பல்கலைக் கழகத் துணைவேந்தர் தலைமையுரை நிகழ்த்துதல்

(2) மறைமலையடிகளார் நூல் நிலையத்தில் மொழியாராய்ச்சி செய்த மொழியியல் அறிஞர்கள், செயலாளருடன் காணப்படுதல்

---

ACC. NO. 38093. 1.10.74


# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு | திருவள்ளுவர் ஆண்டு உ00டு, ஆவணி<br>செப்டம்பர் 1974 | பரல் |
|---|---|---|
| சகூ | | க |


## கழகம் ஆற்றிய வரலாற்றுச் சிறப்புப் பணி

(எ)

### மறைமலையடிகள் நூல்நிலையமும் கலைமன்றமும் உருவான வரலாறு

(நடந்த வண்ணம் உரைத்தல்-2)

## தனித்தமிழ்த் தந்தை மறைத்திரு மறைமலையடிகள் 98ஆவது பிறந்தநாள் விழா

## வரவேற்புரை*

செந்தமிழ்ச் செல்வி 48ஆம் சிலம்பு 12ஆவது பரலில் 'மறைமலையடிகள் நூல் நிலையமும்', மறைமலையடிகள்' கலை மன்றமும் அமைவதற்கு அடிகளார் எழுதிய விருப்ப ஆவணத்தின்மீது உயர்நீதி மன்றத்தில் நடைபெற்ற வழக்கினை ஆராய்ந்து 'அடிகளார் நல்ல நினைவோடு விருப்ப ஆவணத்தை எழுதியுள்ளார்' என்று நடுவர் அளித்த தீர்ப்பே காரணமாகும் என்பது விளக்கப் பெற்றது.

---

*31-8—1974 மாலை 6 மணிக்கு வள்ளலார் திருவருள் மண்டபத்தில் மொழிப் பேரறிஞரும் வேர்ச்சொல் அகரமுதலி இயக்குநருமான தேவநேயப் பாவாணரவர்கள் தலைமையில் நடைபெற்ற விழாவில் சங்கச் செயலர் வ. சுப்பையா பேசியது.

இவ்வரவேற்புரையில் அவை சிறப்புற நடைபெறுவதற்கு ஏற்பட்டுள்ள தடைகளும் அவற்றை நீக்குவதற்கு மறைத் திரு மறைமலையடிகளார் ஆசிரியுலகினின்று மீடியத்தின் வழித் தெரிவித்துள்ள வழி வகைகளும் விளக்கப் பெறுகின்றன.

மும்மொழிப் புலமை நிறைந்தவரும், திருமேனியழகுடன் பேச்சழகு, எழுத்தழகு, குரலழகு ஆகிய அழகுகளை யெல்லாம் ஒருசேரப் பெற்றவரும், பிறமொழி கலவாமல் பேசவும் எழுதவும் முடியும் என்று வழிகாட்டியவரும், தமிழ், தமிழினம், தமிழ்நாடு ஆகியவற்றின் முன்னேற்றத்திற் குழைத்தவரும், தாமே நூல்களை எழுதி அச்சிட்டு விற்றும், சொற் பொழிவாற்றிக் கைம்மாறு பெற்றும் சீரோடும் சிறப்போடும் வாழ்ந்தவரும், தமது ஆராய்ச்சிக்கெனத் தாமே ஈட்டிய பொருளைக் கொண்டு தமிழ், ஆங்கிலம், சமற்கிருதம் ஆகிய மும்மொழிகளிலும் நாலாயிரத்துக்கு மேற்பட்ட நூல்களை வாங்கி ஆராய்ந்து கோடிட்டும் ஓரக் குறிப்புகள் எழுதியும் படித்ததோடு அவற்றைப் பேணிக் காத்து அழகுபெற 'மணிமொழி நூலகம்' அமைத்தவரும் இமயமலை போன்று புகழோங்க விளங்கிய வருமாகிய மறைத்திரு மறைமலையடிகளார் 15-7-1876இல் நாகப்பட்டினத்தில் தமிழ் மக்கள் செய்த தவப்பயனாய்ப் பிறந்தனர்.

தமது பிறந்த நாட்குறிப்பினைக் கொண்டு தமது கைப்படவே தமக்கு அகவை 75 என வரையறுத்து எழுதி வைத்தபடி 15 9-1950இல் அடிகளார் அம்மை அம்பலவாணர் பொன்னார் திருவடிகளைச் சேர்ந்தனர். இதனால் 15 - 7 - 1976 இல் இவர்தம் நூற்றாண்டு விழா உணர்த்தப் பெறுகிறது.

1950 சூன் திங்களில் அடிகளார் தம் நூல்களைப் பற்றி ஓர் ஏற்பாட்டினைச் செய்தல் வேண்டுமென்று எனக்குக் கடிதம் எழுதியுள்ளனர். யான் அவர்களை நேரிற் கண்டு பேசியதோடு கடித வழியும் என்னுடைய கருத்துக்களை எழுதித்தெரிவித்தேன். ஆனால், ஒருவகை ஏற்பாட்டுக்கும் இசைந்தார்களில்லை. எனினும், சைவசித்தாந்த நூற்பதிப்பு கழகம் என்னும் கூட்டுப் பங்கு நிறுவனம் (Public Limited Society) 500க்கு மேற்பட்ட நூல்களை அழகுற வெளியிட்டுள்ளதோடு வேண்டப்பெறும் எந்த நூலையும் வாங்கிக் கொடுத்து வருவதையும், 1927 முதல் நெல்லையில் சிவஞான முனிவர் நூல்நிலயத்தைக் கழக வழி மிகவுஞ் சிறப்பாக நடத்துவதையும் கழகத்தைத் திறம்பட நேர்மையோடும் உண்மையோடும், ஊக்கத்தோடும், கடமை யுணர்வோடும் யான் நடத்தி வருவதையும் அடிகளார் உள்ளபடி

உணர்ந்துள்ளார்கள் என்பது அவர்கள் எழுதிய விருப்ப ஆவணத் (will) தால் நன்கு உணரலாம்.

செந்தமிழ்ச் செல்வி 48ஆம் சிலம்பு ஆடி இதழில் மறைமலையடிகள் நூல்நிலையமும், மறைமலையடிகள் கலை மன்றமும் உருவான வரலாற்றை 'நடந்தவண்ணம் உரைத்தல்' என்ற தலைப்பின்கீழ் எழுதியுள்ளேன்.

நூல்நிலையத்தையும் கலைமன்றத்தையும் நெடுகவும் தொடர்ந்து நடத்துவதற்குக் கழக விதிகள் இடங் கொடுக்குமா என்ற கேள்வி எழுவது நியாயமே. அதற்கு விடை கூறுவது ஒன்று, அவ்விதிகள் இடங் கொடுக்குமாயினும் புதிய சட்டம் ஏற்பட்டு அதன்படி மேலே கூறப்பட்ட நிலையங்களை நடத்து வதற்குக் கழக விதிகளைச் செயற்படுத்த முடியாத நிலை ஏற்படு மாயின் அதற்கென்ன விடை கூறுவது என்பது மற்றொன்று. அவற்றை இங்கே விளக்குவது முதன்மையாகும்.

மறைமலையடிகளார் இப் பூவுலகில் வாழ்ந்த காலத்தில், மரணத்தின்பின் மனிதர் நிலை (இறந்தபின் இருக்கும் நிலை— Life After Death), மனித வசியம் (மனக்கவர்ச்சி—Personal Magnetism), தொலைவிலுணர்தல் (Telepathy), யோகநித்திரை (அறிதுயில் — Hypnotic Sleep), என்னுந் தலைப்புக்களில் நூல்கள் எழுதியுள்ளார்கள். அவற்றிற் பயிற்சியும் பெற்றுள் ளார்கள். தம் மகன் மறை திருநாவுக்கரசு இளைப்பிருமலால் துன்புற்றமையினை அறிதுயிலால் நலப்படுத்தி யுள்ளார்கள். தாம் தொகுத்து வைத்திருக்கும் ஆங்கில நூல்களில் மேலே குறிப்பிட்ட ஆவியுலகத் தொடர்புடைய நூல்கள் (Spiritual books) பல உள்ளன. ஆவிகளைப் படம் பிடித்து வெளி யிடப்பட்டுள்ள நூல்கள் சிலவு முண்டு.

எனவே, அடிகளார் மறைந்தபின் ஆவி யுலகினின்றும் இப் பூவுலகில் வாழும் தகுந்த மீடிய(Medium)த்தின் தொடர்பு கொண்டு பேசுவதும் எழுதுவதும் உண்மை நிகழ்ச்சிகளே யாகும்.

9—9—1959இல் அடிகளார்க்கு ஆவியுலகு தொடர்பாளர் வழி 17 கேள்விகள் அனுப்பி விடை கேட்டேன். மீடியம் திரு. இரா ந. குற்றாலலிங்கம் பிள்ளை யவர்கள் திருநெல்வேலி தலைமை நிலையத்திற் கருகில் ஒரு பலசரக்கு மளிகை நடத்தி வந்தனர். விடை கேட்கப்பட்ட பதினேழு கேள்விகளில் முதல் ஐந்து கேள்விகட்கு மட்டும் விடைகள் வரப்பெற்றேன்.

அவற்றில் முதற் கேள்வியும் அடிகளார் அதற்கு அளித்த விடையும் வருமாறு :

முதல் வினா: பல்லாவரத்தில் அடிகளார் வாழ்ந்த மாளிகையினை விற்று விடுமாறு விருப்ப ஆவணத்தில் குறிக்கப் பெற்றிருக்கிறது. அதன்படி அதனை விற்று விடுவதா? அல்லது பொதுமக்கட்குப் பயன்படும்படி அதனை விற்காமல் வைப்பதா? அப்படி வைக்க வேண்டுமாயின் அதற்குரிய வழி வகைகளைத் தெரிவிக்கும்படி வேண்டுகிறேன்.

விடை: "திரு சுப்பையா பிள்ளை அவர்களே, தாம் வரைந்திருக்கும் முதல் வினாவைக் கருத்துட் செலுத்தும்போது என்ன விடை இறுப்பதென ஒரு முடிவுக்கும் வர இயலவில்லை. இருப்பினும் திருவருளைத் திறம்பட வணங்கி வரைகின்றேன்.

"யாம் அவணிருக்கும்போது வரையப்பட்ட விருப்ப ஆவணத்தை ஆவியுலகில் இன்று சஞ்சரித்து எம் இயக்குநர்வழி நும்மிடம் தொடர்புகொண்டுரைத்தனம் என்ற கூற்றைத் தம்முலக வாழ் மக்கள் நம்புவாரெனக் கருத்திற்கொளலே ஓர் ஐயப்பாட்டையே அவர் மனத்தெழ வைத்தும், இக் கற்பனைகள் திரு. சுப்பையா பிள்ளையின் கூட்டுக் கலவையே. திருநெல்வேலி சென்று ஆவியுலகமென்று ஒன்றிருப்பது போலவும் அவ்வுலகத்திலுள்ள ஆவிகள் இவ்வுலகின்கண் பேச விருப்புற்றிருப்பதையும் திரு சுப்பையா பிள்ளையே அறியாதிருந்த வேளையில் திருநெல்வேலியில் ஏதோ ஒருவரைத் தம் கற்பனைக் கேற்பச் சரிக்கட்டி அடிகளார் ஒரு நண்பர் வழி உரையாடுகின்றதோர் பொய்க் கூற்றைச் சித்திரித்து, அடிகளாரின் செல்வங்களைத் தம் கையிலே வைத்துச் செம்பொருள் சேமிக்கக் கருத்துட்கொண்டே நாடகமாடி வருகிறாரென்பதை நோக்கத் தயங்கார் எம் விருப்ப ஆவணத்தின்கண் உள்ள தரும பரிபாலனப் பணியாளர்கள். அன்பரே, நீரே சிந்தியும்; இவ் விதந்தானே உரைத்து வருகிறார்கள்.

"நண்பரே, அவர் கூற்று எங்ஙனமிருப்பினும் யாமொன்றுரைக்கின்றேம். நும்மிடம் எமது பல்லாவர இல்லத்தைத் தாம் இப்போது விற்று முதல் செய்ய வேண்டாமென வேண்டுகின்றேம். சென்னையில் 'கலைக்கூடம்' நிறுவலென்பதே எமது உறுதி மொழி.

"மறைமலைக் கலைக்காட்சிக் கூடம் பல்லாவரம், சென்னை என்ற பெயரிலங்கத் தாம் துணை செய்தல் நலமென விரும்புகின்றேம். அக் கலைக்காட்சிக் கூடம் தென்னிந்தியக் கலைகளுக்குச் சிறந்ததோர் எடுத்துக் காட்டாகவும் வட இந்தியக் கலைகளுக்கோர் வளமுடைத்தாயுமியைந்தும் எவ்விதமுறையிலமைந்தால் வருவோரும், போவோரும் கண்டு களிப்புறுவரென்பதனைக் கருத்துட் கொண்டு பல்லாவர

இல்லத்தின் வெளிப்புறங்களில் புல்வெளி யமைத்தும், செயற்கைத் தடாகங்கள் சிறியதோருருவில் அமைத்தும் கண்டு களிக்க வருவோர் அமர்ந்து உரையாடச் சாய்வுகள் அமைப்பதுடன் அந் நீர்த்தடாகங்களின் கண் சிவசித்து வாய்ந்த திருவுருவங்களை அமைத்துந் தீபவொளி வீசச்செயின் அன்பரே எம் விருப்பம் நிறைவுற்றதாகும்.

"மேலும் அடிகளாரின் திட்டங்களுக்குச் செம்பொருளுக்கெங்கு செல்வது என்ற கருத்து நம்முள் எழாமலில்லை. செல்வரே, தாம் நினைந்து எவ்வகையில் இப்பணியினை முடிக்கலாமென மனத்துட் கொண்டீரானால் அப்பணி சிறப்புற முடிந்துவிடுமெனபது எமக்குள் தோன்றுகிறது. அவனருளால் காலமறிந்து செய்யத் தமக்கு வலிமை யளிக்கத் திருவருளை வணங்குவோ மென்பதே நும்முதல் வினவுக்கு விடை."

செல்வி 48ஆம் சிலம்பு 12ஆம் பரலில் அப்போதைய நிதியமைச்சர் மாண்புமிகு சி. சுப்பிரமணியம் அவர்கள் முன் வந்து பல்லாவரம் மாளிகையைக் கலைமன்றமாக்குதற்கு நடுவணரசு வழி ரூ. 25,000மும் தமிழகவரசு வழி ரூ. 10,000மும் வாங்கிக் கொடுத்தமை விளக்கப்பட்டுள்ளது. மறைமலையடிகளார் முதல் வினவுக்கு அளித்த விடையின்படியே பல்லாவரம் இல்லம் கலைமன்றமாக அமைந்ததையும் அதனை இப்போது தமிழகத்திலுள்ள கவின்காட்சிக் கூடங்களில் ஒன்றாகத் தமிழகச் சுற்றுலாத்துறையினர் ஏற்றுக்கொண்டமையும் திருவருட்செயலென எண்ணி வணங்குவோம் மகிழ்வோம்.

## சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் அமைப்பும் நோக்கமும்

இக் கழகம் நூற்பதிப்புக்கெனத் தமிழ்நாட்டில் மட்டுமன்றி இந்தியாவிலேயே முதன்முதல் பதிவு செய்யப்பட்ட கூட்டுப் பங்கு நிறுவனம் (Public Limited Company) ஆகும். தமிழகத்திலே இதற்குப்பின் நூற் பதிப்புக்கென நான்கு கூட்டுப் பங்கு நிறுவனங்கள் தோன்றி தொடக்கத்திலேயே செயற்படாமல் மறைந்தன. இறையருளால் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் 1920 செப்டம்பர் முதல் இன்றுகாறும் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. இதனை நிறுவிய என் அருமைத் தமையனார் திருவாளர் வ. திருவரங்கனாரவர்கள் 1944 ஏப்பிரலில் இறையடி சேர்ந்தார்கள். அவர்கள் திருநெல்வேலியில் பதிவு செய்யப்பெற்ற நிலையத்திலேயே பணிபுரிந்து வந்தார்கள். கழகத்தின் முதல் வெளியீடு முதல் இன்றைய 1515ஆவது வெளியீடு வரை தமியேன் பார்வையில் திட்டப்படி வெளிவந்திருக்கின்றன. இவையல்லாமல் பாகனேரி இளைஞர் தமிழ்ச் சங்க வெளியீடுகளும் என் அருமை

அண்ணியார் செந்தமிழ்த் திருவாட்டி நீலாம்பிகை யம்மையார் எழுதிய நூல்களும் எனது பார்வையிலேயே வெளியிடப் பெற்றுள்ளன. 'செந்தமிழ்ச் செல்வி' என்னும் திங்கள் வெளியீடு குறிக்கோளோடு 48 ஆண்டுகளாக எனது பார்வையில் வெளியிடப் பெறுகின்றது. கட்டடஞ் செய்யப்பெற்ற 48 சிலம்புகளும் கலைக் களஞ்சியம்போல் ஆராய்ச்சியாளர்கட்குப் பயன்பட்டு வருகின்றன.

கழகப் புத்தக விற்பனையினாலும் வெளியார் புத்தக விற்பனையினாலும் கிடைக்கப்பெறும் மொத்த ஊதியத்தில் செலவு நீக்கி வரும் மிச்ச ஊதியத்தில் பேர்பாதி கழகத்தின் அறநிலையங்களாகிய தென்னிந்திய சைவசித்தாந்த சங்கம், தென்னிந்திய தமிழ்ச் சங்கம் ஆகிய இவை இரண்டுக்கும் வழங்கப் பெறுகின்றது. இவ் விரண்டு சங்கங்களும் சங்கப் பதிவுச் சட்டப்படி பதிவு செய்யப் பெற்றுள்ளன. அறத்துக்கு ஒதுக்கப்படும் அத் தொகைக்கு வருமான வரி கிடையாது. கழகத்துக்கு எவ்வளவு ஊதியம் கிடைப்பினும் பங்காளிகள் நூற்றுக்கு 6 விழுக்காட்டுக்குமேல் ஊதியம் பெறுவதற்கு விதியில்லை. இக் கழகம் பதிப்புத் தொழிலை நிறுத்துவதாயின் கழகத்தின் உடைமையெல்லாம் அறநிலையங்களுக்கே உரிமையாகும். பங்காளிகட்குக் கிடையாது.

1952ஆம் ஆண்டில் வருமான வரிச் சட்டத்தில் செய்யப் பெற்ற திருத்தத்தினால் கழக அறநிலையங்கட்கு ஒதுக்கிவருந் தொகைக்கு மூன்றாண்டுகட்குச் சேர்ந்தாற்போல் வருமான வரி அதிகாரி (Income-tax Officer) வரிவிதித்து ரூ. ௱8,000 கட்டும்படி யாயிற்று. அம் மூன்று ஆண்டுகட்குரிய வருமானவரி விதிப்புக் கட்டளையின்மீது மேன் முறையீட்டு உதவி ஆணைய (Appellate Assistant Commissioner) ரிடம் விண்ணப்பம் கொடுக்கப் பெற்றது. அவர் வருமானவரி அதிகாரி வரிவிதித்தது சரி எனத் தீர்ப்பளித்தனர். எனவே, அதன்பேரில் மேன்முறையீட்டுத் தீர்ப்பு மன்றத் (Appellate Tribunal)துக்கு விண்ணப்பம் அனுப்பப் பெற்றது. அடுத்த ஆண்டு வரவே அத் தொகைக்கும் வருமான வரி அதிகாரி வரி விதித்துள்ளார். மேலும் முன் இரண்டு ஆண்டுகட்கும் வரி விதிப்பதற்குச் சட்டம் வகை செய்கின்றமையால் அவ்வாண்டுகட்குரிய கணக்கை அனுப்பி வைக்கும்படி அறிவிப்புக் கடிதம் வந்தது. ஒப்புக்கொள்ளப்பட்டு ஒருமுறை வரி விதிக்கப் பெற்றமையால் திரும்பவும் கணக்கை அனுப்புவதற்கில்லை என்று உயர்நீதி மன்றத்தில் ரிட் (Writ) விண்ணப்பம் பதிவு செய்யப்பட்டது. வருமானவரி அதிகாரி இப்போது வரி விதிக்காவிடில் காலங் கடந்து விடும், எனவே வரி விதித்

தாக வேண்டுமென்று கோரவும் உயர்நீதிமன்ற நடுவர் 'வரி விதித்துக் கொள்ளவும், ஆனல் ரிட் விண்ணப்பம் முடிவாகும் வரை வரித் தொகையினைக் கேட்கக் கூடாது' என்று தீர்ப்புக் கூறினர். மேலே கூறியபடி அடுத்த ஆண்டுகட்கு விதிக்கப் பட்ட வரிக்கும் ரிட் விண்ணப்பத்திற் கண்ட இரண்டு ஆண்டு கட்கு விதிக்கப்பட்ட வரிக்கும் மேன் முறையீட்டு உதவி ஆணைய ரிடம் வழக்குப் பதிவு செய்யப்பட்டது.

இந்த நிலையில் 24—8—1958இல் சென்னையில் 'மறைமலை யடிகள் நூல்நிலையம்' மேதகு ஆளுநர் விட்ணுராம் மேதி அவர்கள் தலைமையில் மாண்புமிகு அமைச்சர் பக்தவத்சலம் அவர்களால் திறந்து வைக்கப்பெற்றது. அத்திறப்பு விழாவிலே நூலகவியற் பேரறிஞரும் அத்துறையில் பல நூல்கள் எழுதியவருமான மதிப்புமிகு தாமரைச் செல்வர் டாக்டர் எஸ். ஆர். அரங்கநாதன் அவர்கள் 'Library Service in India and Abroad' என்று ஆங் கிலத்தில் எழுதி வெளியிட்ட 28 பக்கங்கள் கொண்ட நூலின் 3ஆவது பக்கத்தில்

> The blind grasping hands of the Central Board of Revenue should get convinced that it is against the advancement and well-being of our country to ask for the pound of flesh out of the share of the savings of the Saiva Siddhanta Publishing House which go to keep up the Free Public Library Service which the Maraimalai collection is rendering. I hope that some statesman in the Government bench will get a suitable directive issued in this matter."

என்று எழுதியுள்ளனர்.

1959 மே திங்களில் யான் என் மனைவியுடன் திருநெல்வேலி நிலயத்திற்குச் சென்றிருந்தபோது முன்பு குறிப்பிட்ட திரு. இரா. ந. குற்றாலலிங்கம் பிள்ளை அவர்கள் மறைந்த மறைமலை யடிகளாரோடு தொடர்பு கொண்டு அவர்கள் கருத்துக்களை வாங்கித் தெரிவிப்பதாகக் கேள்விப்பட்டு ஓர் இரவு அவர்களைக் கழக நிலயத்துக்கு அழைத்துப் பேசும்போது மறைந்த மறை மலையடிகளார், மறைந்த என் அருமைத் தமையனர், என் அருமை அண்ணியார் ஆகிய மூவரும் யான் கேட்கும் கேள்வி கட்கெல்லாம் திரு. குற்றாலலிங்கம் பிள்ளை அவர்கள் வழி விடை அளித்தனர். அப்போதுதான் அடிகளாரிடம் வருமான வரி வழக்கு நிலைகளை யெல்லாம் எடுத்துரைத்துத் "தங்கள் பெயரால் நூல் நிலயத்தை நடத்த முடியாத நிலை ஏற்பட்

டுள்ளது. எனவே என்ன செய்வதென்று தெரியவில்லை" என்றேன். அதற்கு அடிகளார் "தமிழக நிதியமைச்சர் திரு. சி. சுப்பிரமணியம் அவர்களிடம் வழக்கு நிலைகளை யெல்லாம் எடுத்துக் கூறுங்கள். அவர்கள் மனமுவந்து முன்வந்து நடுவணரசுவழி வரி விலக்கு (Tax exemption) அளிப்பதற்குரிய ஏற்பாட்டினைச் செய்வர்'' என்றனர். யான் சென்னைக்குத் திரும்பிய பின் மறைத்திரு அடிகளாரும் என் தமையனும் அண்ணியாரும் தனித்தனியே ஆவியுலகத் தொடர்பாளர் உயர் திரு இரா. ந. குற்ருலலிங்கம் பிள்ளை அவர்கள் வழிக் கடிதங்கள் எழுதி அனுப்பினர். கருத்துக்கள் யாவும் அடிகளார் முதலியோர் களுடையனவே. ஆதலால் மாண்புமிகு அமைச்சர் சுப்பிரமணியம் அவர்கட்கே வரி விலக்களிப்பதற்கு உதவி செய்யும்படி நேராகவே கடிதம் எழுதி யனுப்புமாறு திரு. குற்ருலலிங்கம் பிள்ளை யவர்கள்வழி மறைமலையடிகளாரை வேண்டி எழுதினேன். யான் வேண்டியபடி மாண்புமிகு சி. சுப்பிரமணியமவர் கட்கு அடிகளார் மீடியம் வழியாக 20-5-1959இல் எழுதிய கடிதம் வருமாறு;

*சென்னை மாநில நிதி கல்வி அமைச்சர் திரு சி. சுப்பிர மணியம் பி. ஏ., பி. எல். அவர்கட்கு,*

*"தாங்கள் என்னைப்பற்றி அறிந்திருப்பீர்கள் என்று நம்பியே யாம் இக் கடித மெழுத எம் உலகத் தொடர்பாள ராகிய இவரால் தங்களுக்கு வரைய எம்மாலெழுதப்பட முடியாது இவரைக் கொண்டு எம்மால் இயக்கி எழுதப் பட்ட பிரதிபலிப்பே இது.*

*"தங்களிடம் ஒரு சிறு உதவி வேண்டி இந்தக் கடிதத் தைச் சைவசித்தாந்தக் கழகத்தின் ஆட்சியாளர் திரு சுப்பையா பிள்ளை அவர்கள் கொண்டு தருவார்கள் எம் பிரதிநிதியாக.*

*"அன்பிற் சிறந்த அமைச்சரே, தாங்கள் இச் சிறுவயதில் திருவருளினால் இம் மாநில அமைச்சராகப் பணிபுரிவது எமக்குப் பெருமையே. ஏன், தமிழகமே கொண்டுள்ள தன் மதிப்பு — நிதி வல்லுநரே உங்களிடம் யாம் வேண்டுவது வேறொன்றில்லை. சைவசித்தாந்தக் கழகத்திற்கு மத்திய சர்க்கார் வருமானவரி இலாகா தருமத்திற்கென ஒதுக்கப்பட்ட ஒரு நிதிக்கு வரி விதித்து—அவ்வரித் தொகையும் கட்டப்பட்டு வழக்கிலிருந்து வருகிறதென உணர்ந்தேம்.*

*"இன்றுவரை சைவசித்தாந்தக் கழகம் தமிழுக்காய்த் தொண்டாற்றிவரும் தன்மை தாங்களறிந்ததே. இன்னும் கழகத்தின் சார்பில் அநேக கல்வி நிலயங்களுக்கான திட்டம் வகுத்துச் செயல்படப் போகும் நிலையிலிருக்கிறதென்ற உண்மை தாங்களறிந்ததே.*

"நிதியமைச்சரே, அன்பின் சிகரமே, யாம் தங்களிடம் வேண்டிக் கொள்வது, இவ் வரிவிதிப்பில் தங்கள் மனத்திற் கொள்ள இதற்கு வரிவிலக்கு அளிக்கும் முறை உண்டு. அல்லது மத்திய சர்க்காரிடம் சிபார்சு செய்து—கழகத்தின் செயல்களுக்கு ஆதரவு காட்டலாம்.

"இப் பேருதவியைச் செய்து கொடுக்கத் தங்களுக்குச் சித்தமிருக்குமானால் மனமுவந்து செய்வீர்களென்ற நம்பிக்கை எமக்கு உண்டு.

"நீங்கள் இது ஏதோ சூழ்ச்சி என்று எண்ணிவிடக் கூடாது. மீடியம் என்ற சக்தி இருக்கும் ஒவ்வொரு மனிதனும் இறந்தவர்களுடன் தொடர்பு கொள்ளலாம் என்பதைத் தங்களுக்கு வலியுறுத்துகிறேம்.

"எம்பெருங்கூத்தன் நீங்கள் பல்லாண்டு பயனுற வாழ்ந்து பாரினில் பயன்படும் செயல்களைச் செய்ய—அருள்புரிய யாம் அவனை இறைஞ்சி வேண்டுகிறேம்."

அன்பன்,

மறைமலையடிகள் என்ற வேதாசலம்

மறைத்திரு மறைமலையடிகளார் விரும்பி வேண்டியபடி மாண்புமிகு நிதியமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்கள் நடுவணரசு வருவாய்த்துறை அமைச்சர் மாண்புமிகு பி. கோபால ரெட்டி அவர்களிடஞ் சொல்லிக் கழகம் அறத்துக்கு ஒதுக்கி வரும் பேர்பாதி ஊதியத் தொகைக்கு வரி விலக்களிக்கச் செய்ததோடு அதுவரை கட்டப்பெற்ற ரூ 58,000மும் திருப்பித்தரவும் செய்தருளினர். அதனுற்றான் சென்னையில் மறைமலையடிகள் நூல்நிலையத்தையும் பல்லாவரத்தில் மறைமலையடிகள் கலைமன்றத்தையும், நெல்லையில் சிவஞான முனிவர் நூல்நிலையத்தையும் அரசினரிடமோ செல்வர்களிடமோ உதவியொன்றும் பெருமலே இதுவரை நடத்திவந்தோம்.

சென்னையில் மறைமலையடிகள் நூல் நிலையமும், பல்லாவரத்தில் கலைமன்றமும் நடைபெறுவதற்கு உதவிய பெரு மதிப்புக்கும் பேரன்புக்குமுரிய இப்போதைய நடுவணரசு அமைச்சர் மாண்புமிகு சி. சுப்பிரமணியம் அவர்கட்குக் கழகமும் தமிழகமும் எழுமையும் நன்றி செலுத்துங் கடப்பாடுடையன.

1971இல் தமிழக அரசு பள்ளிப் பாடநூல்களை யெல்லாம் வெளியிடத் தொடங்கியமையால் நூல் விற்பனையினுல் கிடைக்கப்பெறும் ஊதியம் மிகவுங் குறைந்துவிட்டது ஆதலால் பொருள் முட்டுப்பாட்டினுல் நூல்நிலையங்களை நடத்த முடியாத இக்கட்டான நிலை இப்போது ஏற்பட்டுள்ளது.

**வள்ளலார் திருவருள் மண்டபத் திறப்பு விழா**

தொழிற் செல்வர் வள்ளலார் நா. மகாலிங்கம் அவர்கள் தலைமையில் தமிழகவரசு கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியனவர்கள் மறைமலையடிகள் நூல் நிலையத்தின் இரண்டாவது மாடியில் புதிதாக அமைக்கப்பட்ட வள்ளலார் திருவருள் மண்டபத்தைத் திறந்து வைத்தார்கள். யான் வரவேற்புரையில் நூலகத்தைக் கழக வருவாயைக் கொண்டு நடத்த முடியாத நிலைமைகளையெல்லாம் எடுத்துரைத்து இனி மதிப்புமிக்க டாக்டர் நாவலர் அவர்கள்,

> "கை வல்லராகவும், கைகாட்டு வல்லவராகவும், கண் வல்லராகவும் கண்சாடை வல்லவராகவும் இருந்தால்மட்டும் இப்புகழ் மிகு மறைமலையடிகள் நூல்நிலையத்தை முட்டுப்பாடின்றி நடத்த முடியும்,"

என்று கூறினேன். மாண்புமிகு நாவலரவர்கள் மாண்புமிகு கலைஞர் அவர்களோடு 2—12—1965இல் மறைமலையடிகள் நூல்நிலையத்தைப் பார்வையிட்டபோது,

"மறைமலையடிகளார் திரட்டி வைத்திருந்த நூல்களோடு கிடைத்தற்கரிய வேறு பல நூல்களையும் திரட்டி 'மறைமலையடிகள் நூல்நிலையம்' என்ற பெயரில் சிறந்த நூல் நிலையத்தைத் திறக்க முன்வந்து அதில் வெற்றி கண்ட திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் பாராட்டுதலுக்கும் வாழ்த்துதலுக்கும் உரியராவார்கள்; நூல்நிலையம் மேன்மேலும் வளர்ந்து அழியாப் புகழோடு என்றென்றும் நிலை பெற்று நிற்கத்தக்க வகையில் - அரசினரின் அரவணைப்பும் உதவியும் என்றென்றும் இருக்க வேண்டும்" என்றும் உள்ளப் பூரிப்போடு எழுதியுள்ளார்கள்.

வள்ளலார் மண்டபத் திறப்புரையிலே மாண்புமிகு டாக்டர் நாவலர் அவர்கள் பேசியதிலிருந்து ஒருபகுதியினை மட்டும் அடியிற் காண்க.

"......அவர்கள் (வ. சு.) பெருமுயற்சி யெடுத்துத் தமிழ் ஆக்கம்பெற ஊக்கம்பெறத் தமிழ் மிகச் சிறப்பான ஏற்றம் பெறுதற்கான அரும்பெரும் பணிகளை மிகச் சிறப்பாக ஆற்றிவருகிறார்கள் என்பதைப் பலமுறை நான் எடுத்துச் சொல்லிப் பாராட்டி இருக்கிறேன்.

"......அவர்கள் நான் 1965இல் எழுதியதைச் சுட்டிக் காட்டினார்கள். அரசின் அரவணைப்பும் உதவியும் என்

றென்றும் இருக்க வேண்டும் என்று சொன்னேன். இன்னுஞ் சொல்லுகிறேன். ஆகவே அதிலிருந்து நான் என்றைக்கும் மாறவில்லை. நிலைபெற்று நிற்கத்தக்க அளவுக்கு அரசின் அரவணைப்பும் உதவியும் என்றென்றும் இருக்க வேண்டும். ஆனால், அவ் வரவணைப்பும் உதவியும் என் வழியில் எவ்வகையில் வேண்டும் என்பதைப் பெறவேண்டிய முறையில் பெறவேண்டிய வழியில் பெறவேண்டிய வகையில் பெறுதற்குத் திரு. சுப்பையா பிள்ளை முயலவேண்டும். அதை எந்தெந்த வகையில் கிடைக்கச் செய்ய முடியுமோ அந்தந்த வகையில் கிடைக்கச் செய்ய என்றைக்கும் ஆயத்தமாக இருக்கிறேன். அந்த அரவணைப்பும் உதவியும் இல்லாவிட்டால் இத்தகைய ஆராய்ச்சிக் கூடங்கள் நிலைபெரு. இந் நிலையம் வளர வேண்டு மென்பதில் யான் அழுத்தமான விருப்பமுடையேன். திரு. சுப்பையா அவர்களும் இத்தகைய முயற்சியை எடுக்காமலிருப் பார்களேயானல் தமிழினுடைய இவ்வளவு சிறப்பை இந்த நாடு பெறச் செய்வதற்கான உள்ளம் படைத்தவர்கள் இந்த நூற்றாண்டிலே யாரும் தோன்றுவார்கள் என்று நான் நினைக்கவே இல்லை.

''எந்தெந்த நூல்களை வெளியிட்டால் விலையாகும் என்கிற எண்ணந்தான் நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டு தொண்ணூற்ருென்பது பதிப்பாளர்களிடத்தில் இருக்கக்கூடும். நம் கண்ணுக் கெட்டாது அழிந்துபோகக் கூடிய பல்வேறு தமிழ்ப் பெரும் இலக்கியங்களைக் கொண்டுவந்து தமிழினுடைய ஏற்றத்தையும் சிறப்பையும் அருமை பெருமைகளையும் என்றென்றும் உலகம் பாராட்டத்தக்க அளவுக்குப் பெரிதும் முயன்று அதனல் ஏற்படக்கூடும் இன்னல்களை, இழப்புக்களை யெல்லாம் பொருட்படுத்தாமல் துணிவாற்றி இன்பம் தரும் வினையைச் செய்யும் நோக்கத்தோடு அவர்கள் செய்துமுடித் திருக்கிற காரணத்தினல்தான் அவர்களைப் பாராட்ட நான் மிகமிகக் கடமைப் பட்டிருக்கின்றேன்.''

## நூலகத் துறைக்கென அமர்த்தப்பெற்ற தமிழகப் பொது நூலக இயக்குநரவர்களைப் பாராட்டியது

*[செல்வி சிலம்பு 46 பரல் 12இல் காண்க.]*

1948இல் முதன் முதல் தமிழகத்திலேதான் பொது நூலகச் சட்டம் நிறைவேற்றப்பெற்றது. கடந்த 22 ஆண்டு களில் நூலகத்துறை சிறப்பாக வளர்ச்சியுற்று இன்று தமிழ் நாட்டில் ஆயிரத்துக்கு மேற்பட்ட கிளை நூலகங்களும், பன்னி

ரண்டு மாவட்ட மைய நூலகங்களும் மாநில மைய நூலகமுமாக மலர்ந்துள்ளது. 30-7-72 வரை நூலகத்துறை பள்ளிக் கல்வித்துறை இயக்குநரோடு சேர்ந்திருந்தது. நூலகத்துறை பரந்த அளவில் விரிவடைந்தபின் அதற்கெனத் தனி இயக்குநர் வேண்டுமென்று கடந்த பதினைந்து ஆண்டுகட்கு மேலாக நூலகப் பணியில் ஆர்வமுடைய அனைவரும் விரும்பினர். சென்னை நூலகக் கழக உறுப்பினர்களில் யானும் ஒருவன். ஆதலால் தனி இயக்குநர் வேண்டுமென்பதில் பெருவிருப்பங் கொண்டு தீர்மானத்துக்கு ஆதரவு நல்கினேன். தமிழக அரசு 30-7-72இல் நூலகத்துக்குத் தனித்துறை ஏற்படுத்தித் திரு. வே. தில்லைநாயகம் (எம்.ஏ., எம்.எல்.எஸ்., பி.டி..) அவர்கள் பொது நூலகத்துறை இயக்குநராக அமர்த்தப் பெற்றமையினை மகிழ்ச்சியோடு வரவேற்கிறேன்.

---

## பொது நூலக இயக்குநர் திரு. வே .தில்லைநாயகம் அவர்கள்

*கழக ஆட்சியாளராகவும், மறைமலைபடிகள் நூல்நிலையச் செயலாளராகவுமுள்ள*

## தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளை அவர்களைப் பாராட்டியது

### (1)

**(பவள விழா மலரில் எழுதியது)**

மனிதன் வாழப் பிறந்தவன். எனவே வாழப் பிறந்தவன் வாழவேண்டும். வாழ்வு இருவகைப்படும். முதல்வகை எப்படியும் வாழ்வது அதனல் வாழ்பவருக்கும் பயனில்லை, சமூகத்திற்கும் பயனில்லை. சில சமயம் அது சமூகத்திற்குக் கேடாகவும் முடியும்.

இரண்டாவது வகை எப்படி வாழவேண்டும் என்பதை அறிந்து உணர்ந்து வாழ்வதாகும். அதன்படி பிறந்த ஒவ்வொருவரும் விவரமறிந்த நாள்முதல் கற்பன கற்று, செய்வன செய்து, தாமும் வாழ்ந்து சமூகத்தையும் வாழச் செயது புகழொடு வாழ வேண்டும்.

அதற்குக் கல்வி கற்றல், கடனறிந்தொழுகல், மன்பதை உணர்வு, தாய்மொழி உணர்வு, தாய்நாட்டுப் பற்று, நூலுணர்வு ஆகியன கொண்டு வாழவேண்டும்,

அம்முறையில் கடந்த ஐம்பதாண்டுகளாக நல்ல நூல்கள் வெளியிடுவது, நல்ல நூல்கள் வெளியிட நல்லவர்களை ஆதரித்து ஊக்குவது, முன்னாள் நூல்களைத் தொகுப்பது, அதற்கு ஆதாரமாய் இருந்த பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளைத் தொகுத்து வெளியிடுவது, தமிழ் வளர்க்க மாநாடுகள் கூட்டுவது, கூட்டிய மாநாட்டு உரைகளைத் தொகுத்து வெளியிடுவது, வெளியிட்டவற்றைச் சேரவேண்டிய இடத்தில் சேர்க்கப் பாடுபடுவது, ஆராய்ச்சி மன்றங்கள் நடத்துவது போன்ற துறைகளில் உலகெலாம் தமிழ் பரப்பப் பாடுபட்டுவரும் நற்றமிழ்த் தொண்டர் திரு. வ. சுப்பையா அவர்கள் பணி வளர, தொடர, சிறக்க வேண்டுகிறேன்.

## (2)

## பவள விழாவில் பேசியது

### (செந்தமிழ்ச் செல்வி சிலம்பு ஙஎ பரல் கஉ)

"சரியாகச் சொன்னால் விழாநாயகர் அவர்களே ஒரு நல்ல நூல். அந்த நல்ல நூலுக்கு உள்ள பொருள் 'தமிழ்' ஒன்று தான். அவர் எந்தக காரியம் செய்தாலும் தமிழ் வாழ வேண்டும்—தமிழ் வளர வேண்டும்—தமிழர்கள் உயரவேண்டும் என்ற கருத்தில் அதற்கு என்னென்ன செய்ய வேண்டுமோ அவற்றையெல்லாம் செய்து வருகிறார். தமிழ் நூல்களைப் பதிப்பித்துத் தரணியெல்லாம் பரப்பியதற்காக இந்திய அரசு அவருக்குப் பத்மஸ்ரீ பட்டம் வழங்கியது. "தமிழைப் பரப்பும் இவர் பத்மஸ்ரீ பட்டத்தை ஏற்றுக் கொள்ளலாமா?" என்று ஒருவர் என்னைக் கேட்டார். அதற்கு நான் சொன்னது இது தான். "அவர்கள் தமிழைப் போற்றுவதற்காக இந்தப் பட்டம் கொடுத்தார்கள். தமிழைப் போற்றுவதற்காகக் கொடுத்த பட்டம், இந்தத் தமிழ் தரணியெங்கும் பரவுவதற்காக உதவும் என்பதற்காக அதை ஏற்றுக்கொள்ளுகிறேன்" என்றுதான் "அதை அவர் ஏற்றுக்கொண்டிருக்க வேண்டும்" என்றேன். பிறகு அவர்களது வரலாற்றைப் படிக்க நேர்ந்தது. அதிலேயும் இதைத்தான் எழுதியிருக்கிறார்கள்.

"இன்று நாடெங்கும் நூலகங்கள் இருக்கின்றன. ஆயிரக் கணக்கான வழங்கு மனைகள் இருக்கின்றன. கிட்டத்தட்ட நாலாயிரம் பேருக்கு மேற்பட்டவர்கள் நூலகப் பணியில் ஈடுபட்டிருக்கின்றார்கள். இருந்தாலும் நூலகப் பணியைப் பற்றி ஒரு நூல் ஆயிரம் படிகள் வெளியிட்டால் அந்த ஆயிரம் படிகள் விற்பதற்கு இரண்டாண்டுகள் ஆகின்றன. 1973ஆம் ஆண்டிலே இந்த நிலை!

"திரு. சுப்பையா பிள்ளையவர்கள் பல ஆண்டுகட்கு முன்பே சில நூல்களை அவற்றின் பயன்பற்றி அவை விற்குமா விற்காதா என்பதைப்பற்றிக் கவலைப்படாமல் வெளியிட்டவர்கள். அதனால் வரும் கட்ட நட்டங்களை ஏற்றுக் கொண்டவர்கள். இவர் சைவசித்தாந்தக் கழகம் என்று ஆரம்பித்தாலும் சமயத்தோடு நின்றுவிடாது—தமிழ் இலக்கண இலக்கியத்தோடு நின்று விடாது—அறிவுத்துறை ஒவ்வொன்றிலும் தவறாது நூல்களை வெளியிட்டு வந்திருக்கிறார்கள்.

"நூலகச் சட்டம் வருவதற்கு முன்னாலேயே 1927 இலேயே தாம் தொகுத்த நூல்களை யெல்லாம் சிவஞான முனிவர் நூல் நிலையம் என்று திருநெல்வேலியில் ஒரு நூலகம் அமைத்து உதவினார்கள். அவர்கள் எந்தப் பணியையும் எளிதில் தொடுவதில்லை — தொட்டால் விடுவதில்லை; தொடர்ந்து செய்து கொண்டே யிருப்பார்கள். இவர்களுக்குத் தாம் பதிப்பித்த நூல்களை வாங்குவாரில்லையே என்று ஒரு வருத்தம். வாங்கியும் அவற்றைப் பயன்படுத்துவாரில்லையே என்று மற்றொரு வருத்தம். இந்த இரண்டு வருத்தங்களும் நேர்மை யான வருத்தங்கள். இந்த வருத்தங்களை மாற்றுவதற்கு நாமெல்லாம் முயலவேண்டும். தமிழென்னும் உணர்வாலும் தொண்டாலும் அவர்கள் உயிர் வாழ்கிறார்கள். அவரை நாம் பாராட்டும் முகமாக நமக்கெல்லாம் நூல்படிக்கும் எண்ணம் வளராதா — வளர முடியாதா என்றுதான் நாம் பாராட்டு கின்றோம்."

பொது நூலக இயக்குநர் திரு. வே. தில்லைநாயகம் அவர்கள் எனது நூல் வெளியீட்டுத் தொண்டை அளவு கடந்து பாராட்டிப் பேசியும் எழுதியுமுள்ளதற்கு யான் நன்றிக் கடப் பாடுடையேன்.

தமிழகக் கல்வித்துறை அமைச்சர் மாண்புமிகு டாக்டர் நாவலர் நெடுஞ்செழியனவர்கள் ஒளிவு மறைவின்றி மறைமலை யடிகள் நூல்நிலையத்துக்குப் பொருளுதவி செய்ய வேண்டு மென்று தாம் 1965 இல் பாராட்டுரை யேட்டில் எழுதியுள்ளதை ஒப்புக் கொண்டு 27—3—72இல் வள்ளலார் திருவருள் மண்டபத் திறப்பு விழாவிலே பேசியுள்ளார்கள். அவர்களுடைய கருத்தின்படி பொருளுதவி கேட்டு 10—6—1972இல் விண்ணப்பம் எழுதியனுப்பப் பெற்றது. மண்டபம் கட்டிய தற்கான மொத்தச் செலவு ரூ 53,564-43இல் ஒரு பகுதி ரூ21,000 நடுவணரசிடமிருந்து நன்கொடையாக வரப்பெற்றது. தமிழகவரசு இதுவரை அதற்குப் பொருளுதவி ஒன்றும் செய்ய வில்லை. அதுவும் ஒரு பகுதி வழங்குமானால் நூல் நிலைய வளர்ச் சிக்குப் பேருதவியா யிருக்கும்.

மறைமலையடிகள் நூல்நிலையத்தை நடத்துவதற்கு ஏற்படும் செலவுகட்கு விவரக் கணக்கோடு 10—2—1973இல் தமிழக வரசுக்கு விண்ணப்பம் அனுப்பப் பெற்றது. மாண்புமிகு அமைச்சரவர்களும் குறிப்பெழுதி யனுப்பியிருப்பதாகத் தெரிய லானேன். இன்னும் அதுபற்றிய முடிவு ஒன்றும் தெரியவில்லை.

என் தமிழ்த் தொண்டினையும் அயரா உழைப்பினையும் என் அகவை முதிர்வினையும் கருதி என்மீது அறிஞர் பெரு மக்களும் அன்பர்களும் பரிவு காட்டுவதுபோல் தமிழக அமைச் சரவர்களும் அரசு உயர் அலுவலர்களும் சிறப்பாகப் பொது நூலக இயக்குநரவர்களும் நூல வெளியீட்டுக்கும், கழகம் நடத்தும் மறைமலையடிகள் நூல நிலையததுக்கும், பல்லாவரத்தி லுள்ள மறைமலையடிகள் கலைமன்றத்துக்கும் செய்யத்தக்க வகையில் பொருளுதவி செய்ய வேண்டுமென்பதைப் பணிவன் புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

இப்போதைய தமிழகவரசு சைதாப்பேட்டை பாலத்துக்கு மறைமலையடிகள் திருப்பெயரைச் சூட்டியதற்கும், செங்கற் பட்டருகில் மறைமலையடிகள் பெயரால் 'புது நகர்' அமைக்க ஏற்பாடு செயதிருப்பதற்கும், சென்னைக் கடற்கரையில் மறை மலையடிகள் திருவுருவச சிலையினை, சட்ட மன்றத் தலைவர் மாண்புமிகு புலவர் கோவிந்தன் அவர்கள் அமைப்பதற்கு எடுததுவரும் முயற்சிக்கும், தமிழக மக்கள் மிக்க நன்றியுடை யவர்களாவார்கள். கூவம் பூங்காவுக்கும் மறைமலையடிகள் திருப்பெயரையே சூட்டுதல் வேண்டு மென்பது எனது பேரவா!'

தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகளார் புகழ் தமிழக மெங்கும்! பரவுக ஒளிர்க! என வேண்டி எனது வரவேற்புரை யினைமுடிக்கின்றேன்.

## வேண்டுகோள்

தமிழக வரசும் நடுவணரசும் இதனை மேற்பார்வையிட்டு
விரைந்து செய்தற்பாலன.

தாள் (காகிதம்) அச்சிடப் பெற்ற பழைய நூல்களைப் பாது காப்பதற்கு மேலை நாடுகளிலே கையாளும் முறைகளை விரைந்து செய்யாவிடில் சில ஆண்டுகளில் பல நூல்கள் மக்கிப் பழுது பட்டுப் படிப்பதற்குப் பயனற்று ஒழிந்து போகும். எனவே பழைய நூல்களைத் தனியறையில் வைப்பதற்குக் குளிர்ப்பதன (air conditioned) அமைப்பும், படப்பிடிப்பு முறையில் சில நூல்களைப் படி எடுப்பதற்குரிய கருவிகளும் பிறவும் வேண்டும். நூல்களின் எண்ணிக்கை பெருகுவதற்கேற்பக் கட்டடத்தை விரிவுபடுத்தவும் வேண்டும். இத்தகைய உதவிகளைத் தமிழக வரசும் நடுவணரசும் தகுதியறிந்து விரைந்து செய்யக் கடமைப் பட்டிருக்கின்றன.

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

(புல்$^{5}$—வளைதற் கருத்து வேர்ச்சொல்.)

புல்—புர்—புரள். புரளுதல்=1. உருளுதல். அடித்துப் புரண்டு விழுந்தான், கழுதை புரண்ட களமாய்ப் போய் விட்டது. (உ. வ). 2. சுற்றுதல். (W). 3. அலைமறிதல். "புரணெடுந் திரைகளம்' (கம்பரா. விபீடண. 27). 4. கரை கடந்தோடுதல். ஆறு கரைபுரண்டோடுகிறது. (உ. வ.). 5. மாறி மாறி வருதல். 'வெயில்களும் நிலாக்களும் புரள'' (கம்பரா. பிரமா. 99) 6. மாறுபாடடைதல். 7. சொற்பிறழ்தல். 8. சாதல். ''கழுத்திலே புண்ணாகிப் புழுத்துப் புரண்டான்'' (குருபரம். 165. ஆரு). 9. பணம் விரைந்து தொகுதல் அல்லது கைமாறுதல்.

ம. புரளுக, க. பொரள், தெ. பெரலு. புரள்—புரளி= 1. பொய். 2. வஞ்சனை. 3. குறும்பு. (W). 4. கலகம் (W).

புரள்—புரண்டை—பிரண்டை=திருகலான கொடிவகை.

ம. பிரண்ட.

புரள் — புரட்டு. புரட்டுதல்=1. உருட்டுதல். ''முடை யுடைக் கருந்தலை புரட்டுமுன்றா ளுகிருடை யடிய'' (பட்டினப். 230). 2. கீழ்மேலாகத் திருப்புதல். 3. கறி முதலியவற்றைக் கிண்டி வதக்குதல். கறியைப் புரட்டு, கத்தரிக்காயைப் புரட்டி விருந்தது. (உ. வ.) 4. உண்டபின் வயிற்றிற் கோளாறு நேர்தல். வயிற்றைப் புரட்டுகிறது. (உ. வ.). 5. சொற் பொருள் திரித்தல். 6. வஞ்சித்தல் (W). 7. நிலத்திற் படி வித்து அழுக்காக்குதல். புதுச் சேலையைக் கீழும் மேலுமாகப் புரட்டுகிருள். (உ.வ.).

ம. புரட்டுக, க. பொரள்சு.

புரட்டு—புரட்டல்=குழம்புங் கூட்டுமின்றிக் கட்டியாகச் சமைத்த கறிவகை.

புரட்டு=1. கீழ்மேலாகத் திருப்புக. 2. சொற் பொருள் திரிப்பு. ''புறப்பட்டார் புரட்டுப் பேசி'' (திருவாலவா. 38 : 14). 3. வஞ்சகம். 4. குமட்டல். 5. வயிற்றுவலி. 6. கறிச் சமையல் வகை.

புரட்டன்=1. சொற்பொருள் திரிப்போன். 2. மாருட்டக்காரன்.

புரட்டு—புரட்டி=1. தோசை திருப்பி. 2. புரட்டன்.

புரள்—புரட்சி=1. பெருங்கலகம். 2. அரசியல் வகை மாற்றம். எ—டு : இரசியப் புரட்சி. 3. மக்கள் வாழ்க்கை முறை (தொழில், மதம், மொழி, கல்வி, ஊண், உடை முதலியவற்றின்) மாற்றம். 4. பிறழ்வு.

புரள்—பிறழ். பிறழ்தல்=1. மாறுதல். "சிறுகா பெருகா முறை பிறழ்ந்து வாரா" (நாலடி 110). 2. முறை கெடுதல். "களிற்றுகிர்ப் பிறழ்பற் பேய்கள்" (சீவக. 804) 3. மாறுபட்டுக் கிடத்தல். "மயிலெருத்துற ழுணிமணி நிலத்துப் பிறழ" (கலித். 103). 4. பெயர்தல் (அக. நி.). 5. புடைபெயர்தல். "மாணெழி லுண்கண் பிறழுங் கயலாக" (கலித். 98). 6. நெளிதல். "வயலாரல் பிறழ்நவும்" (பதிற்றுப் 13 : 1). 7. வெட்டி வெட்டி விளங்குதல். "ஒளி பிறழு நெடுஞ்சடை" (கல்லா. 54 : 11). 8. முரிதல். "திரைபிறழிய விரும்பௌவத்து" (பொருந. 178). 9. திகைத்தல். "பிறங்கலிடையிடைப்புக்குப் பிறழ்ந்து" (பரிபா. 19:59). 10. நடுங்குதல் (சூடா). 11. சொன்மாறுதல். 12. இறந்து படுதல். "பிணிபுநீ விடல் சூழிற் பிறழ்தரு மிவளென" (கலித். 3).

புரள்—பிரள்—பிரளி (பிறளி)=குழந்தை நோய் வகை.

புர்—புரி. புரிதல்=1, வளைதல். 2. திரும்புதல். "மற்றை யருகே புரியில்" (திவ். இயற். திருவிருத். 42 வ்யா. பக். 247). 3. முறுக்குக் கொள்ளுதல். "சுகிர்புரி நரம்பின்" (மலைபடு. 23). 4. அசைதல். "தார்புரிந் தன்ன" (பதிற்றுப். 66:13).

"புரி=1. முறுக்கு. புரியடங்கு நரம்பு" (சிறுபாண். 34). 2. சுருள். "புரிக்குழன் மடந்தை" (சீவக.2688). 3. சுரி (Spiral screw) 4. யாழ் நரம்பு. "புரிவளர் குழலொடு" (சீவக. 124). 5. கயிறு, "மரற்புரி நரம்பின்" (பெரும்பாண் 181). 6. சங்கு. "புரியொருகை பற்றி" (திவ். இயற். 1 : 31). 7. மாலை. "புரிமணி சுமந்த பொற்பூண்" (சீவக. 619). 8. கட்டு. (சூடா.) 9. வளைந்த மதில். 10. மதில் சூழ்ந்த நகரம். (பிங்).

ம., க., து., புரி.

புரிக்கூடு=வைக்கோற் புரி. நெற்கூடு. "புரிக்கூட்டில் நின்ற..............பல வருக்கத்து நெல்லு" (சிலப். 10 : 123 உரை).

புரிகுழல்=கடை குழன்று சுருண்ட கூந்தல். "புரிகுழன் மாதர்" (சிலப். 14:37).

புரிசடை=சுருண்ட சடை (W).

புரிநூல் = முறுக்கிய பூணூல்." திருமார்பினிற் புரிநூலும்" (தேவா. 385:3).

புரிமணை=வைக்கோற் புரி வளையம்.

புரிமுகம்=1. சங்கு. 2. நத்தை.

சங்குக் கூடும் நத்தைக் கூடும் உள் வளைவுள்ளன.

புரி முறுக்கு=தாமரை மொட்டு (W).

புரிவளை=முறுக்கு வளையல்.

இடம்புரி=இடப்புறமாக வளைந்த சங்கு.

கொடும்புரி=மிக ஏறிய முறுக்கு.

முப்புரி=முறுக்கிய முந்நூல் (பூணூல்).

வலம்புரி=வலப்புறமாக வளைந்த சங்கு.

வைக்கோற்புரி=முறுக்கிய வைக்கோற் கயிறு.

புரி—புரிவு=1. தப்பி நீங்குகை. "புரிவின்றி......போற்றுவ போற்றி" (பு. வெ. 8 : 20). 2. தவறு. "புரிவிலா மொழி விதுரன்" (பாரத. சூது. 43). 3. வேறு படுகை. (அக. நி).

புரி—புரிசை=நகரைச் சூழ்ந்த மதில்.

"ஏந்துகொடி யிறைப் புரிசை" (புறம். 17).

புரி—பரி. பரிதல்=1. (வளைந்து) முறிதல், "வெண் குடை கால்பரிந் துலறவும்" (புறம். 229). 2. அறுதல். "பரிந்த மாலை" (சீவக. 1349). 3. அழிதல். "பழவினை பரியு மன்றே" (சீவக. 1429). 4. பிரிதல் (W).

பரித்தல்=சூழ்தல். "குருதி பரிப்ப" (அகம். 31). 2. அறுத்தல். (அக. நி.).

க. பரி. பரி—வ. பரி.

"*Pari*, ind. round, around, about, round about; fully, abundantly, richly (esp.) ibc. [where also *pari*] to express fulness (or high degree), *R. V.* & c. & c.; as a prep. (with acc.) about (in space and time), *R.V.*; *A.V.*; against,

opposite to, in the direction of, towards, to, ib. (cf. Pāṇ. i, 4, 90; also at the beginning of a comp. mfn. cf. ib. ii, 2, 18, Vartt. 4 Pat. and *Pary-adhyayana*), beyond, more than, *A.V.*; to the share of (with √ *as* or *bhu*, to fall to a person's lot.), Pāṇ i, 4, 90; successively, severally (e. g. vriksham *pari sincati*, he waters tree after tree), ib.; (with abl.) from, away from, out of, *R. V.*; *A. V.*; *SBr.* (cf. Pāṇ, i, 4.93); outside of, except, Pāṇ, 1,4,88, Kat. (often repeated, ib. viii, 1, 5; also at the beginning of or the end of am ind. Comp., ib. ii, 1, 12); after the lapse of Mu. iii, 119; MBh. xiii, 4672 (some read *parisamvatsarat*); in consequence or on account or for the sake of, *R.V.*; *A.V.*; according to (esp. *dharmanas pari*, according to ordinance or in conformity with law or right), *R. V.*; [cf. *Zd. pairi*, Gk. pari]"

—A Sanskrit English Dictionary by Sri Monier Monier Williams, p. 591

"*peri*, pref. = Gk *peri* round, about, as: *perianth*, floral envelope; — carditis n., inflammation of—cardium;—*cardium*, membranous sac enclosing the heart, so — *cardiac*, —*cardial*, aa.; *pericarp*, seed-vessel, wall of ripened ovary of plant................." The Concise Oxford Dictionary.

பரிகலம் = 1. வட்டில், வட்டமான உண்கலம். "மலரயன் கொடுத்த பரிகல மிசையவே" (குற்ரு. குற. 13). 2. தெய்வமும் உயர்ந்தோரும் உண்டெஞ்சிய மிச்சில். "வேதியச் சிறுவற்குப் பரிகலங் கொடுத்த திருவுளம் போற்றி" (பதிஞெ. கோயினுன். 40).

பரிகை = 1. மதிலைச் சூழ்ந்த அகழி. (திவா). 2. மதிலுண் மேடை. (பிங்.). தோன்று மிப் பரிகை" (மேருமந். 1054).

பரிகை—வ. பரிகா.

பரிகம் = 1. மதில். (சூடா.). 2. அகழி. 3. மதிலுண் மேடை.

பரிசு = வட்டமான கூடையோடம் (coracle).

பரிசு—பரிசல் (coracle).

பரி—பரிசை = 1. வட்டமான கேடகம். (புறம். 16, உரை). 2. வட்டமான விருது. (W). 3. கூடையோடம்.

பரி—பரிதி=1. வட்ட வடிவு. (திவா.) "பரிதி ஞாலத்து" (புறம். 174) 2. கதிரவன். "பரிதியஞ் செல்வன்" (மணி. 4:1). 3. கதிரவனை அல்லது திங்களைச் சூழ்ந்த கோட்டை (பரிவேடம்), (பிங்). "வளைந்து கொள்ளும் பரிதியை" (இரகு. இந்து. 7). 4. தேருருளை. "அத்தேர்ப் பரிதி' (களவழி. 4). 5. சக்கரப் படைக்கலம். "பரிதியிற் ருேட்டிய வேலைக் குண்டகழ்" (கல்லா. 80:23). 6. சகோடப்புள். "தண்கோட் டகம் பரிதியங் குடிங்கு கூடுமே" (இரகு. நாட்டுப். 40). 7. கோளின் தொலைக்கோண வளவு (Epicycle).

பரிதி காந்தம் = ஒருவகைக் கன்மணி. (Jasper), "பரிதி காந்தமென்றுரைத்திடு பன்னொரு சிகரத்து" (உபதேசகா. கைலை. 24).

பரிதிபாகை=வானநூ லளவை வகை. (W).

பரிதி வட்டம்=கதிரவன் மண்டலம்.

"வெங்கதிர்ப் பரிதி வட்டத் தூடுபோல் விளங்குவாரே" (திவ். பெரியதி. 4:5:10).

புர்—புரு—புருவு—புருவம் = 1. கண்களின் மேலுள்ள மயிர் வளைவு. "கொடும்புருவங் கோடா மறைப்பின்" (குறள். 1086). 2. புண்விளிம்பு. (W). 3. செய் வரப்பு (W).

புருவம்—வ. ப்ருவ (bhruva).

Cf. E. *brow* = Arch of hair over eye. *OE. bru*, *ON. brur*, eyebrow.

புரு—புருள்—புருளை—புருடை=முறுக்காணி. ஒ. நோ; உருள்—உருளை—உருடை—ரோதை—L. *rota*, wheel.

புருடை—பிருடை=1. முறுக்காணி. (W). 2. புட்டியடைக் குந்தக்கை. 3. சுழலாணி. (சங். அக.).

தெ. பிரட (b), க. பிரடெ (d).

பிருடை—பிரடை=1. முறுக்காணி. (W). 2. முறுக்காணி வில்லை.

தெ. பிரட, க. பிரடெ.

புல்—புள்—பள்—பண்டு—பண்டி=1. சக்கரம். 2. வண்டி. "செந்நெற் பகரும் பண்டியும்" (சீவக. 61). 3. சகட நாண் மீன் (சூடா).

தெ., க. பண்டி.

பண்டி—பாண்டி=1. கூடாரப் பண்டி. (சிலப். 14:168, அரும்.). 2. மாட்டு வண்டி. "அகவ வரும் பாண்டியும்" (பரிபா. 10 : 16). 3. வட்டமான வட்டு அல்லது சில். 4. நிலத்திற் கீறிய கட்டங்களில் வட்டெறிந்து நொண்டி விளையாடும் (பாண்டி நாட்டு) விளையாட்டு. 5. காளை அல்லது எருது. (பரிபா. 20 : 17. குறிப்பு). பாண்டி—பாண்டில்= 1. வட்டம். (திவா.) "பொலம்பசும் பாண்டிற் காசு" (ஐங்குறு. 310). 2. தேர்வட்டை. (சிலப். 14 : 168, உரை). 3. இரு சக்கர வண்டி, "வையமும் பாண்டிலும்" (சிலப். 14:168). 4. குதிரை பூட்டிய தேர் (திவா.). "பருந்துபடப் பாண்டி லொடு பொருத பல்பிணர்த் தடக்கை" (நற். 141). 5. வட்டக் கட்டில். "பேரள வெய்திய பெரும் பெயர்ப் பாண்டில்" (நெடுநல். 123). 6. வட்டத்தோல். "புள்ளியிரலைத் தோலூ னுதிர்த்துத் தீதுகளைந் தெஞ்சிய திகழ்விடு பாண்டில்" (பதிற்றுப். 74). 7. வட்டக் கண்ணுடி. ஒளிரும்............ பாண்டில் நிரைதோல். (பு. வெ. 6 : 12). 8. வெண்கலத் தாளம். "இடிக்குரல் முரச மிழுமென் பாண்டில்" (சிலப். 26:194). 9. கிண்ணி, "சுழற் பாண்டிற் கணைபொருத துளைத் தோலன்னே" (புறம். 97). 10. விளக்குத் தகழி (பிங்). 11. குதிரைச் சேணம். "பாண்டி லாய்மயிர்க் கவரிப்பாய்மா" (பதிற்றுப். 90:35). 12. குண்டை (காளை). "மன்னிய பாண்டில் பண்ணி" (சீவக. 2054). 13. விடையோரை (இடபராசி). (திவா). 14. வட்டப் பாதமுள்ள விளக்குத் தண்டு. "நற்பல பாண்டில் விளக்கு" (நெடுநல். 175). 15. வட்டாரம், மண்டலம், நாடு (W).

பாண்டி—பாண்டியம்=1. எருது. "செஞ்சுவற் பாண்டியம்" (பெருங். உஞ்சைக். 38:32). 2. எருது கொண்டுழும் உழவு அல்லது பயிர்த் தொழில். "பாண்டியஞ் செய்வான் பொருளினும்." (கலித். 136).

பாண்டி—பாண்டியன்=காளை யொத்த மறவன்.

"மடுத்தவா யெல்லாம் பகடன்ன னுற்ற
இடுக்கண் இடர்ப்பா டுடைத்து." (குறள். 624)

"அச்சொடு தாக்கிய பாருற் றியங்கிய
பண்டச் சாகாட் டாழ்ச்சி சொல்லிய
வரிமணல் ஞெமரக் கற்பக நடக்கும்
பெருமிதப் பகட்டுக்குத் துறையு முண்டோ" (புறம். 90)

"விரம்பாத நீர்யாற் றிடுமணலு ளாழ்ந்து
பெரும்பார வாடவர்போற் பெய்பண்டந் தாங்கி
மருங்கொற்றி மூக்கூன்றித் தாடவழ்ந்து வாங்கி"
(சீவக. 2784)

உழைப்பது காளை.

காளை =1. இளவெருது. 2. கட்டிளமைப் பருவத்தினன் (திவா.). 3. ஆண்மகன் (திவா.) 4. பாலைநிலத் தலைவன். (திவா.). 5. மறவன். "உரவுவேற் காளையும்" (புறம். 334)

முதற் பாண்டியன் அவன் காலத்திற் பண்டையனுயிருந் திருக்க முடியாததலால், பண்டு என்னும் சொல்லினின்று பாண்டியன் என்னும் வேந்தன் குடிப்பெயரைத் திரித்து, பழைமையானவன் என்று பொருள் கூறுவது பொருந்தாது.

பாண்டியன் நாடு என்பது பிற்காலத்திற் பாண்டி நாடென மருவிற்று.

குறிப்பு:—1. வளைதற் கருத்து, சாய்தல், கோணல், மடங்கல், நெளிதல், வட்டமாதல, உருண்டையாதல், உருள் தல், சுற்றுதல், சுழலுதல் முதலிய இனக் கருத்துக்களெல்லா வற்றையுந் தழுவும்.

2. வட்டக் கருத்தினின்று முழுமைக் கருத்துப் பிறக்கும். எ-டு; கடனை வள்ளிதாய்க் கொடுத்துத் தீர்த்து விட்டான். வள்ளிது=வட்டமானது, முழுமையானது.

E. roundly = in thorough—going manner.

இம்முறையில், பரி என்னும் தென்சொல்லும் வடமொழி யில் முன்னொட்டாகி (prefix), அல்லது முழுநிறைவு முழுமைக் கருத்தைத் தோற்றுவிக்கும். எ-டு: பூரணம்-பரிபூரணம்.

———

குறிப்பு

இக் கட்டுரை ஆசிரியர் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாண ரவர்கள் தமிழக அரசால் 8-5-1974இல் 'வேர்ச்சொல் அகர முதலி' தொகுப்பதற்கு இயக்குநராக அமர்த்தப் பெற்ற செய்தி மட்டற்ற மகிழ்ச்சியளித்தது. ஆனால், இதுவரை அலுவலகத்துக்கு இடம் கொடுக்கப் பெறவுமில்லை. உதவிக்கு அவர்கள் குறிப்பிட்டுள்ள அறிஞர்கள் இருவரும் அமர்த்தப் பெறவுமில்லை. எனவே அவர்கள் செய்ய வேண்டிய வேலை தடைப்பட்டுள்ளது.

# *முளவுமா முயலா ?

[பி. எல். சாமி, பி.எஸ்.ஸி.]

செந்தமிழ்ச்செல்வி பரல் 12 இதழில் முளவுமா முள்ளம் பன்றியன்று, அது முயலே என்று பேராசிரியர் மதிவாணன் அவர்கள் எழுதியிருந்தார். அக்கட்டுரையைப் படித்துப் பின்னும் ஆராய்ந்ததில் முளவுமா முயலன்று, முள்ளம்பன்றியு மன்று. அஃது இவை இரண்டிலும் வேறான முள்ளெலி என்று தற்காலம் அழைக்கப்படும் சிறு விலங்கே என்று தெரிகின்றது. இந்த முள்ளெலி (Hedge hog) முள்ளம் பன்றியைப்போன்றது. ஆனால், முள்ளம்பன்றி இனத்தைச் சார்ந்தது அன்று. முள்ளம் பன்றியிலும் மிகச் சிறியது. முயலளவே உள்ளது. கொறிக்கும் விலங்கினத்தைச் சேர்ந்தது.

கன்னடத்தில் முயலின் பெயர் 'மொள' என்று வழங்குகின்றது. தமிழில் வழங்கும் முயல் என்ற பெயர் கொலாமி மொழியில் 'மோலம்' என்றும், குடகு மொழியில் 'மொன' என்றும். கோண்டி மொழியில் 'மொலால்' என்றும், குய் (Kui) மொழியில் 'மராலு' என்றும் வருவது திராவிட வேர்ச்சொல் அகராதியில் (Dravidian Etymological Dictionary) காட்டப்பட்டுள்ளது. இந்தத் திராவிட மொழிப் பெயர்கள் எல்லாம் ஒரே வேர்ச்சொல்லில் இருந்து தோன்றி யவையே. துளு மொழியில் முயெரு, முகெலு, மொள என்று மூன்று சொற்கள் முயலைக் குறித்து வழங்குவதைக் கவனித்தால் மொள என்ற சொற்கு வேர்ச்சொல் முடு, முடுகு என்று கொள்ள முடியாது. முடு என்ற சொல்லை 'பிணவு நாய் முடுக்கிய தடியொடு' என்று வரும் மலைபடுகடாம் வரியில் நாயின் செயலுக்குக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். 'முயல் வேட்டெழுந்த முடுகுவிசைக் கதநாய்' என்று நற்றிணை (252) கூறுவதையும் காணலாம். முயலையும் முளவுமாவையும் துரத்தும், வேட்டையாடும் நாய்க்கே 'முடு' என்ற சொல்லின் அடிப்படையாகப் பெயர் எழலாம். நாய்க்கு 'முடுவல்' என்ற பெயர் திவாகரம், பிங்கலந்தை முதலிய நிகண்டுகளில் கூறப்

*'முளவுமா' என்பது முயலுமன்று, முள்ளம்பன்றியுமன்று. என்று இவ்வாசிரியர் எழுதியது போன்று திருநகர்ப் புலவர் திரு இரா. இளங்குமரனவர்களும் எழுதியுள்ளனர். இதுகாறும் இலக்கணம் இலக்கியங்கள், வரலாறு ஆகியவற்றுக்கு மறுப்பும் மறுப்பிற்கு மேல் மறுப்பும் எழுதுவது வழக்கம். இப்போது அறிவியற் கட்டுரைக்கு அவ்வாறு வந்திருப்பது மகிழ்ச்சி தருவதொன்றாகும்.

பட்டிருப்பதைக் காணலாம். கன்னடத்தில் வழங்கும் மொள என்ற பெயருக்கும், சங்ககாலத்தில் வழங்கிய 'முளவுமா' என்ற பெயருக்கும் உள்ள வெறும் ஒலியொப்புமையைக் கொண்டு அப்பெயர் முயலே என்று கொள்ள முடியாது. கள், களா, களவு என்று ஒரு செடிப்பெயர் வருவதுபோல முள், முளா, முளவு என்று இந்த விலங்குப்பெயர் வந்தது என்று கொள்ள வேண்டும். இதன் பெயர் முளவு என்றே வழங்கி, பின்னர் மா என்ற விலங்கைக் குறிக்கும் பொதுப்பெயரையும் சேர்த்து முளவுமா என்று வந்தது. எய் என்று வரும் பெயர் எய்ம்மான் என்றும் சங்க நூல்களில் வருவதைக் காணலாம். முள் என்ற சொல்லும் மா என்ற சொல்லும் சேர்ந்து முளவுமா என்று வரவில்லை. அப்படிச் சேரும்போது முண்மா என்று வரும் என்பதை நிகண்டுகளில் வரும் பெயரிலிருந்து தெரிந்து கொள்ளலாம். முளவு என்றே இப்பெயர் பிங்கலந்தையில் வருகிறதைக் காணலாம்.

மலைபடுகடாத்தில் ஓரிடத்தில் 'எய்' என்றும், மற்றோரிடத்தில் 'முளவுமா' என்றும் குறிக்க வேண்டுமா என்ற கேள்வி கவனிக்கத்தக்கது. இரண்டும் வெவ்வேறு விலங்காக இருக்கலாம் என்று கூறுவது பொருத்தமே. ஆனால் அந்த விலங்கு முயலாக இருக்க முடியாது. முயலைப்பற்றிச் சங்க நூல்களில் பல பாடல்களில் செய்திகள் வருகின்றன.

> "சிறியிலை நெல்லிக் காய்கண் டன்ன
> குறுவிழிக் கண்ண கூரலங் குறுமுயல்
> முடந்தை வரகின் வீங்குபீள் அருந்துபு
> குடந்தையஞ் செவிய கோட்பவர் ஒடுங்கி
> இன்றுயி லெழுந்து துணையொடு போகி
> முன்றிற் சிறுசிறை நீர்கண் டுண்ணும்
> புன்புலந் தழீஇய பொறைமுதற் சிறுகுடித்" —அகம், 284.

> "காடுறை இடையன் யாடுதலைப் பெயர்க்கும்
> மடிவிடு வீளை வெரீஇக் குறுமுயல்
> மன்ற இரும்புதல் ஒளிக்கும்
> புன்புல வைப்பினெஞ் சிறுநல் லூரே" —அகம், 394.

> "நீருட் பட்ட மாரிப் பேருறை
> மொக்கு ளன்ன பொகுட்டுவிழிக் கண்ண
> கரும்பிடர்த் தலைய பெருஞ்செவிக் குறுமுயல்
> உள்ளூர்க் குறும்புதற் றுள்ளுவன வுகளும்
> தொன்மை மன்றத் தாங்கட் படரின்" —புறம், 332.

"காமரு பழனக் கண்பி னன்ன
தூமயிர்க் குறுந்தா ணெடுஞ்செவிக் குறுமுயல்" —புறம், 334.

"பதவுமே யல்பற்றி முயற்பற ழோம்புஞ்
சீறூ ரோளே நன்னுதல்"
—தொல். மரபு ௧௦. பேராசிரியர் மேற்கோள்.

"தாளிமுத னீடிய சிறுநறு முஞ்ஞை
முயல்வந்து கறிக்கு முன்றிற்
சீறூர் மன்னனைப் பாடினை செலினே" —புறம், 328.

"புன்றலைச் சிறாஅர் வில்லெடுத் தார்ப்பிற்
பெருங்கட் குறுமுயல் கருங்கல னுடைய
மன்றிற் பாயும் வன்புலத் ததுவே" —புறம், 322.

"பகுவாய் ஞமலியொடு பைம்புத லெருக்கித்
தொகுவாய் வேலித் தொடர்வலை மாட்டி
முள்ளரைத் தாமரைப் புல்லிதழ் புரையு
நெடுஞ்செவிக் குறுமுயல் போக்கற வளைஇக்"
—பெரும்பாண். 112-115

"குருளை கோட்பட வஞ்சிக் குறுமுயல்
வலையிற் றப்பாது மன்னுயி ரமைப்ப"
—தொல். மரபியல். அ. மேற்கோள்.

"மலர்பிணைத் தன்ன மாயிதழ் மழைக்கண்
முயல்வேட்டு எழுந்த முடுகுவிசைக் கதநாய்"
—நற்றிணை, 252.

"குறுங்கோ லெறிந்த நெடுஞ்செவிக் குறுமுயல்
நெடுநீர்ப் பரப்பின் வாளையொ டுகளுந்து" —புறம், 339.

"வன்புலத்துப் பகடுவிட்டுக்
குறு முயலின் குழைச்சூட்டொடு" —புறம், 395.

"குறுமுயலி னிணம்பெய் தந்த
நறுநெய்ய சோறென்கோ" —புறம், 396,

"நறும்பூம் புறவி னொடுங்கு முயலிரியும்
புன்புல நாடன் மடமகள்" —ஐங்குறுநூறு, 421.

சங்க நூல்களில் பல பாடல்களிலும் முயல் என்றே பெயர் வழங்கியிருக்க, ஐந்தே பாடல்களில் மட்டும் முளவுமா, முளவு மான் என்ற பெயர் வழங்கின என்று கருத முடியாது. ஆதலின் முளவுமா முயலன்று. முயலைப்பற்றிச் சொல்லும்போது நெடுஞ்

செவிக் குறுமுயல், பெருஞ்செவிக் குறுமுயல் என்று அடைமொழி வைத்துக் கூறியிருப்பதைக் காணலாம். குறுமுயல் என்றும் பல இடங்களில் கூறியதைக் காணலாம். முளவுமாவுக்கு இத்தகைய அடைமொழிகள் சங்கப்பாடல்களில் கூறப்படவில்லை. முயலைப்பற்றித் தெளிவான செய்திகள் சங்க நூல்களில் குறிக்கப்பட்டுள்ளன. அச் செய்திகளில் ஒன்றுகூட முளவுமாவைப்பற்றிக் கூறப்படவில்லை. முயலின் பளிங்குக் கண்கள், நெடுங் காதுகள், குறுந்தாள், கரும் பிடர்த்தலை, கூனல் உடல் ஆகியவைகளில் ஒன்றேனும் முளவுமாவுக்குக் கூறப்படவில்லை. எய்ப்பன்றிக்கு முள் கூறப்பட்டதுபோல முளவுமாவுக்குக் கூறவில்லை என்று சுட்டிக்காட்டப்பட்டன. முயலுக்குச் சங்க நூல்களில் கூறப்பட்ட செய்திகள் முளவுமாவுக்குக் கூறப்படவில்லை என்பதையும் கவனிக்க வேண்டும். முளவுமாவைக் குழிமுயல் (Rabbit) என்றும் கருத முடியாது. ஏனென்றால் குழிமுயல் வெளிநாட்டிலிருந்து இரு நூற்றாண்டுகளுக்கு முன் இந்தியாவிற்குக் கொண்டுவரப்பட்டதாகும். தமிழ் நாட்டில் ஒரே ஒரு வகை முயலே இயற்கையில் உள்ளது. குழிமுயலின் இனத்திலும் வேறானது தமிழ் நாட்டில் வாழும் காட்டு முயல் என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

முள்ளம்பன்றி வேட்டையை வீரத்தன்மையுடையது என்று வேட்டையாளர் கருதுவதில்லை. காட்டுப்பன்றி வேட்டையையே வீரம் பொருந்தியது என்று சங்க நூல்களும் வேறு பிற வெளிநாட்டு நூல்களும் குறிப்பிடுகின்றன. கண்ணப்ப நாயனார் புராணத்தில் திண்ணன் தன்வேடர் குடிக்குத் தலைமையேற்றதற்கு அடையாளமாக நடத்திய கன்னிவேட்டை காட்டுப்பன்றி வேட்டையே என்பதைக் கவனிக்க வேண்டும். முளவுமாவைக் குறவன் காட்ட, நாய் விரட்ட, குன்ற நாடன் கொன்றதாக அகநானூறு (182) கூறுவதால் எய்ப்பன்றியைக் கொல்வதுபோல முளவுமாவையும் உணவுக்காக வேட்டையாடிக் கொல்வது வழக்கமென்று தெரிகின்றது. முளவு சிறிய விலங்காதலால் எளிதில் புதரில் பதுங்கிக் கொள்ளும். அதை நாயும் குறவனும் காட்ட, குன்றநாடன் கொன்றான்.

முளவுமாவின் முட்கள் எய்ப்பன்றியின் முட்கள் போல நீண்டதோ, வலிவுடைத்தோ அன்று. எய்ப்பன்றியின் முன் முனை அம்பின் உடுமுனை போன்று இருக்கும். எய்ப்பன்றியின் முள் உடலில் தைத்தால் அதை எடுக்கும்போது உடுமுனை சதையில் மாட்டிக்கொண்டு சதையைப் பிய்த்துவிடும். ஆதலின் மிகவும் கடுமையான வலி தரும். முளவுமாவின் முள் ஊசி

போல் முனையுடையது. குத்தினாலும் எளிதில் எடுத்து விடலாம். எய்ப்பன்றியின் முள் உடலில் தைத்தால் பிய்த்துக் கொண்டு வந்து விடும். இதன் காரணமாகவே எய்ப்பன்றி முள்ளை எறிவ தாகக் கருதினர். ஆனால் உண்மையாக முள்ளை எய்வதில்லை. எய்வதாகக் கருதினதால் 'எய்' என்று பெயரிட்டனர். 'மெய் யுருவி வையுறு முனை முள்ளை எய்யு தறின' என்று சீகாளத்திப் புராணம் (8-6) கூறியதையும் காணலாம். ஆனால் முளவு மானின் முள்ளைப்பற்றியோ அந்த முட்களால் துன்புறுதல் பற்றியோ சங்க நூல்களில் செய்திகள் கூறப்படவில்லை. ஆனால் முளவு என்ற பெயரிலேயே முள்ளுடைய தன்மை கூறப்பட் டுள்ளது; மற்றும் எய் என்பது வெறும் முள் அன்று. எய்யப் படும் அம்பு போன்ற முள் ஆகும். ஆதலின் முள்ளம்பன்றியை 'எய்' என்று அழைத்தனர். ஆனால் பிற்காலத்தில் எய்யையும் முளவுமாவையும் உடம்பில் முள் இருந்த காரணத்தால் முள்ளம்பன்றி என்று அழைத்தனர்.

> "மூண்டெழு சினத்துச் செங்கண் முளவுமுள் ளரிந்து கோத்த
> நாண்டரு மெயிற்றுத் தாலி நலங்கிளர் மார்பிற் றூங்க"
>
> —பெரியபுராணம் - கண்ணப்ப நாயனார் புராணம், 20

பெரிய புராணத்தில் முளவு முள் அரிந்து என்று கூறியதால் முளவு என்பதை முள்ளம்பன்றியென்று சேக்கிழார் காலத்தி லேயே கருதினது தெரிகின்றது. பிங்கலந்தை முதலிய நிகண்டுகளிலும் இக் காரணத்தாலேயே இரண்டையும் முள்ளம் பன்றி என்று கூறினர். பிற திராவிட மொழிகளிலும் முள்ளம் பன்றிக்கும் முள்ளெலிக்கும் முள்ளம்பன்றி என்ற ஒரே பெயர் வழங்குவதைக் காணலாம். முள் ளெலிக்கும் முகம், பன்றி போலவே இருக்கும் என்று விலங்கு நூலார் குறிப்பிட்டுள்ளனர். பன்றி முகத்தோடு இருப்பதால் ஆங்கிலத்திலும் 'வேலிப்பன்றி' (Hedge hog) என்றழைக்கின்றனர். முகம் பன்றி போலவும் முள்ளும் இருப் பதால் தமிழில் முள்ளம்பன்றி என்று இதையும் பிறகாலத்தில் அழைத்தனர். இந்த முள்ளெலி முட்புதரில் வாழும். அடர்த்தி யில்லாத புதர்களிலும் பாறைகளிலும் வாழும். முளவுமாவும் உடும்பைப்போல, எளிதாகக் கொன்று கானவர் உண்ணக் கூடியதேயாகும். முயலை வலை போட்டுப் பிடிப்பதையே சங்க நூல்கள் குறிப்பிடும். ஆனால் முளவுமானை அம்பெய்து கொல்வதாகவே கூறப்பட்டுள்ளதால் முளவுமான் முயல் அன்று என்பது தெளிவாகின்றது. முயலை அம்பால் கொல்வது எளிது கானமுயலைக் கொல்ல அம்பு வேண்டுவதில்லை என்று கருதினர் என்று தெரிகின்றது.

திவாகர நிகண்டில் மூன்று வகைப் பன்றிகள் கூறப்பட்டுள்ளன. பன்றி, மருட்டுப்பன்றி, முட்பன்றி ஆகியவை தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. இவைகளில் மருட்டுப் பன்றியே முளவுமா என்று சங்க நூல்களில் குறிப்பிடப் பட்டது. தற்காலத்தில் முள்ளெலி என்று இதை அழைக்கின்றனர். முட்பன்றியே தற்காலம் முள்ளம் பன்றி என்றழைக்கப் படுகின்றது. திவாகரத்தில் முட்பன்றியின் பெயராக முளவுமா என்ற பெயர் குறிப்பிடப்படவில்லை என்பதைக்கூர்ந்து கவனிக்க வேண்டும். 'எய்யே முண்மா, சல்லியம் முட்பன்றி' என்று திவாகரம் கூறுகின்றது. முண்மா என்று கூறிற்றே ஒழிய முளவுமா என்று கூறவில்லை. திவாகரத்திற்குப் பிறகு வந்த பிங்கலந்தை நிகண்டில் முட்பன்றியின் பெயராக முளவு என்ற பெயரும் சேர்க்கப்பட்டுள்ளதைக் காணலாம். மருட்டுப் பன்றியின் பெயரையே பிங்கலந்தையிலும் பிற்கால நிகண்டு களிலும் விட்டுவிட்டனர். பிங்கலந்தை ஆசிரியர் மருட்டுப் பன்றியையும் முள்ளம்பன்றியையும் ஒன்றேயென்று கொண்டார் போலும். ஆனல் சேந்தன் திவாகரம் கூறியதே சரியானதாகும். மருட்டுப்பன்றியின் மாட்சிப் பெயராக கிருட்டி, போத்து, கோலம், கிரிகிரி என்ற பெயர்கள் திவாகரத்தில் கூறப்பட்டுள்ளன. இந்த விலங்கு மருட்டுமே ஒழிய ஊறு செய்யாது என்பது தெளிவாகின்றது. முள்ளம்பன்றி ஊறு செய்யும். ஆனல் இது முள்ளம்பன்றியோ என்று மருள வைக்கும். இந்த விலங்கு ஊறு செய்யாது. அதனல் மருட்டுப்பன்றி என்றழைத்தனர். கிருட்டி, கிரிகிரி என்ற பெயர் களும் மருளவைப்பதைக் குறித்து வந்த பெயர்களாகும். திருவாசகத்தில் 'கிறி செய்த ஆரொருவன்' என்று திருவம்மானை யிலும் திருச்சதகத்திலும் மாணிக்கவாசகர் கூறுகின்ருர். இங்கு 'கிறி' என்ற சொல் பொய்ம்மை என்ற பொருளில் வருவதைக் காணலாம். கிறிச்சான் என்ற சொல்லும் காவல் காப்பவர் பிறரை மருட்டுவதற்காகப் பயன்படுத்தும் ஓசை செய்யும் கருவி யைக் குறித்து வருவதைக் கவனிக்க வேண்டும். கிறி என்ற சொல் பொய்ம்மையாக மருட்டுவதைக் குறிக்கும் என்பது தெளிவாகின்றது. பொய்ம்மையாக மருட்டுவதால் 'கிரிகிரி' (கிறி கிறி) என்ற பெயர் இந்த மருட்டுப்பன்றிக்குப் பெயராக வந்தது. திவாகரத்தில் 'கிரிகிரி' என்ற பெயர் தனியாக மருட்டுப்பன்றியைக் குறித்து வழங்கி யிருக்கவும் அதற்குப் பிற்காலத்தில் வந்த நிகண்டான பிங்கலந்தையிலும் சூடா மணியிலும் காட்டுப்பன்றிக்குக் 'கிரிகிடி' என்ற பெயர் வழங்கு வதாகத் தவருகக் கூறப்பட்டுள்ளது. மற்றும் கிரி, கிடி என்று இரு பெயராகவும் பெயர்த்தெழுதுவோர் தவருக எழுதிப் பதிப்

பித்துள்ளனர். திவாகரத்தில் வரும் 'கிரிகிரியையே' பிங்கலந்தையிலும் சூடாமணியிலும் 'கிரிகிடி' என்று தவறுதலாகப் பெயர்த்தெழுதினர் போலும். கிருட்டி என்ற பெயரும் பன்றியின் பெயராகச் சூடாமணி தவருகக் கூறியுள்ளதையும் கவனிக்க வேண்டும். இக்காலத்திலும் நாட்டுப் புறங்களில் போலியாக மருட்டுவதற்கு 'கிரிகிரி பண்ணுவது' என்று கூறுவதைக் கேட்டிருக்கலாம். கிரிகிரி என்ற விலங்குபோல மருட்டுவது என்பது பொருளாகும் நாட்டு மக்களிடையே இன்று வழங்கும் பெயர் திவாகர நிகண்டு தோன்றிய காலத்திலேயே வழங்கினதாகத் தெரிகிறது. இந்தப் பன்றி உடலைச் சிலிர்த்து முட்களைக் காட்டுவதால் பயத்தைத் தரும். ஆனுல் இதை எளிதில் கொன்று விடலாம். இந்தப் பன்றி தனக்கு ஊறு வருவதைத் தெரிந்தால் பந்துபோலச் சுருட்டிக்கொள்ளும். அதனுல் இதைக் கோலம் என்றழைத்தனர். சங்க நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள முளவுமா மருட்டுப்பன்றியே என்பதில் ஐயமில்லை. முளவுமாவையே தற்காலம் முள்ளெலி என்று அழைக்கின்றனர். ஆனுல் இஃது எலி அன்று. எலியினத்தைச் சேர்ந்த கொறிக்கும் விலங்காகும். இதை விலங்கு நூலார் Paraechinus microps nudiventris (Blyth) என்று அழைப்பர். தற்காலத்தில் 'மிளா' என்று அழைக்கப்படும் கடமானை முளவு என்று பெயரொப்புமையால் மயங்கக்கூடாது. கடமான் சங்க நூல்களில் கடமா என்றழைக்கப்படுகின்றது. மிளேயில் காணப்படும் மான் மிளா எனப்பட்டது. இந்த மிளா என்ற பெயர் இலக்கியத்திலும் நிகண்டுகளிலும் காணப்படவில்லை. ஆதலின் மிகப் பிற்காலத்ததாகிய இப்பெயருடன் முளவு என்ற சங்கநூற் பெயரை ஒப்பிட்டு மயங்கக்கூடாது

———

குறிப்பு :

'முளவுமா முயலன்று' என்பது பற்றிப் புலவர் திரு. இரா. இளங்குமரனவர்கள் எழுதிய ஆய்வுக் கட்டுரை அடுத்த இதழில் வெளியிடப் பெறும்.

# கானல் வரி : காதல் போட்டியா? கலைப் போட்டியா ?

[பேராசிரியர்; தொண்டல் சு. மகாதேவன்.]

கலை கலைக்காகவே என்னும் கொள்கைதான் கலைக்குச் சிறப்புத் தரும் கொள்கை! அந்தக் கொள்கையிலே மாதவி இறுதி நாள்வரை காலூன்றி நின்ருள். ஆனல் கோவலனே கலை காதலுக்காகவே என்ற கொள்கையனுய்,

"நகையாடு ஆயத்து நன்மொழி திளைத்துக்
குரல்வாய்ப் பாணரொடு நகரப் பரத்தரொடு
திரிதரு மரபின்............

திருச்செல்வனக இருப்பதைக் காண்கின்ருேம்.

மனையறம் படுத்த நாள் மனைவியின் முன்னிலையில் மன்னு மோர் குறிப்பினனுய்த் தன்னிலை மயங்கித் தீராக் காதலின் அவள் திருமுகம் நோக்கித்

"திருமுலைத் தடத்திடைத் தொய்யில் அன்றியும்
ஒருகாழ் முத்தமொடு உற்றதை எவன்கொல்
திங்கள் முத்தரும்பவும் சிறுகிடை வருந்தவும்
இங்கிவை அணிந்தனர் என்னுற்றனர் கொல்"

என உலவாக் கட்டுரை பல பாராட்டுவதை நம்மால் புரிந்து கொள்ள முடிகின்றது. கணவனும் மனைவியும் கண்ணெடு கண்ணிணை நோக்கொத்துக் கலந்து விடுகின்ற நிலையில் வாய் மொழிக்கு எந்தப் பொருளும் இருக்க முடியாது. அதனுலேயே கோவலன் உதிர்த்த சொற்களை வெறும் குறியாக் கட்டுரை என அடிகளாரும் கோடிட்டுக் காட்டுகிருர்.

**கலைமாதவியும் காதல் மாதவியும்**

இதே கோவலன் நகர நம்பியர் திரிதரும் தெருவிலே மாமலர் நெடுங்கண் மாதவி தன் மாலையினை வாங்கி,

"மணமனை புக்கு மாதவி தன்னேடு
அணவுறு வைகலின் அயர்ந்தனன் மயங்கி
விடுதல் அறியா விருப்பினன் ஆயினன்"

எனக் காண்கின்ருேம்! இங்குக் கலையொடு காதலைக் குழப்பித் திரியும் கோவலனின் கையகப்பட்ட மாதவி ஆடல், பாடல், அழகு குருவங் கோடல் என்ற அருந்தொழில்களைக் கலையாகக்

கற்றுத் துறைபோகியவன் என்பதையும் நாம் அறிவோம் !! 'காதல் மாதவி' 'கலவியும் புலவியும் காதலற் களித்துக்' கோவலனின் காலடியில் வீழ்ந்து கிடந்தாள் என்பது உண் மையே. ஆனல் கலைத்துறை முறறி

"நிலத் தெய்வம் வியப்பெய்த நீணிலத்தோர் மனமகிழப்"

புகழேணியின் படிகளிலே உயர்ந்து செல்லும் 'கலை மாதவி' எங்ஙனம் கோவலனது சிறிய கைகளிலே அடங்கி ஒடுங்க முடியும் ? மாதவியின் முகத்தை உலகம் கண்ணுல் காணுதவாறு தன் காதல் திரைகொண்டு மூடிமறைக்கத் துடித்தான்; ஊடற் கோலமோடு ஒய்ந்து கிடந்தான். உண்மையில் கோவலனது நிலை தன் காதலி முகம்போல் காட்சி தரும் திங்கள் பலர் கண் களுக்கும் பொது விருந்து அளிப்பது கண்டு மனம் புழுங்கி,

"மலரன்ன கண்ணுள் முகமொத்தி யாயின்
பலர்காணத் தோன்றல் மதி"

என்று தடை விதிப்பவன் நிலையாகவே ஆகிவிட்டது. சொல் வதற்கும் முடியாமல் மெல்வதற்கும் முடியாமல் செத்துக் கொண் டிருந்த கோவலன் காதல் மாதவியோடு இணைந்து கடலாடி மகிழ ஒரு நல்வாய்ப்புக் கிட்டிற்று. ஆனல் அங்கும் கூட அவள் கலை மாதவியாகச் சுடர் விட்டு நின்று கையிலே யாழை நீட்டி 'ஏவல் அன்பின் பாணி யாது எனக்' கேட்டு விட்டாள் ! அந்தோ, பாவம் ! கோவலன் என் செய்வான் ?

"காவிரியை நோக்கினவும் கடற்கானல் வரிப் பாணியும்
மாதவி தன் மனமகிழ வாசித்தல்"

தொடங்கினன். ஆம் ! கோவலன் காதல் மாதவி அருகிலிருந் தாலும், உயர உயர எழுந்துயரும் கலை மாதவியின் வினவிற்கு விடையிறுக்க வேண்டியிருந்தது. காமக் களியாட்டத்திலே இனிவாய் வண்டாகவும் இன்னிள வேனிலாகவும் இழைந்து கொண்டிருந்த கோவலனைக் கலைக் கண் வீசிக் கவர்ந்து, ஒரு குழந்தைக்குத் தந்தையாக உயர்த்திக், கருணை மறவனுகவும், இல்லோர் செம்மலாகவும், செல்லாச் செல்வனுகவும் செம்மை யுறச் செய்தவள் மாதவியே. எங்கெங்குக் கோவலன் இடறி வீழ்கிருனே அங்கெல்லாம் அவனை மாதவி குனிந்து எடுத்து உயர்த்தி நிறுத்தியிருக்கின்ருள் ! கலைத்திறம் காட்டிக் கானல் வரி பாடும் நேரத்திலும் கோவலன் இன்பத்துறையில் எளி யனுக ஆழ்கின்ருன். மாதவியும் உடன் ஆழ்வது போல் நடித்து அவனை எடுத்து உயரத்தில் கொடுபோய் நிறுத்திக் 'கலகல' வென நகைத்துக் கலையொளி வீசுகின்ருள்.

"கோதை பரிந்தசைய மெல்விரலால் கொண்டோச்சும் குவளைமாலைப்
போது சிறக்கணிக்கப் போவார் கண்போகாப் புகாரே எம்மூர்"

என்று சொல்லும் போதும்,

"விரி கதிர் வெண்மதியும் மீன் கணமும்
ஆமென்றே விளங்கும் வெள்ளைப்
புரிவளையும் முத்தும் கண்டாம்பல்
பொதியவிழ்க்கும் புகாரே எம்மூர்"

என்று பாடும்போதும் கோவலன் கலையின் எல்லைக்குள்ளேயே நிற்கின்றான் என்றாலும் கண்ணுக்கினிய தன் காதலியை,

"கடற்புலவு கடிந்த மடற்பூந் தாழைச்
சிறைசெய் வேலி அகவயி னாங்கோர்
புன்னை நீழற் புதுமணற் பரப்பில்
ஓவிய எழினி சூழவுடன் போக்கி
விதானித்துப் படுத்த வெண்கால் அமளிமிசை"

உடன் இருத்தி வைத்துக் கொண்டு கலையறம் படுத்துக் கானல் வரிபாடும் நிலையிலேயும் 'மனையறம் படுத்த காதைப்' பாணியில் மாதவியோடும் குறியாக் கட்டுரை கூறத் தொடங்கி விட்டான் கோவலன்! கலைவானில் உலவமுயன்ற கோவலன் தன் இயல்பு காரணமாகக் காதல் வெள்ளத்தில் இடறி வீழ்ந்து அவளை இடர் செய்த எழுதரு மின் இடை பற்றியும், இருகயல் விழி பற்றியும், இணைஇள வளமுலை பற்றியும் உலவாக் கட்டுரை பல பாராட்டி அணைக்க நெருங்கும் நேரத்தில் அவனைத் தானும் அணைவாள் போல் தொட்டு எடுத்து, ஆனால் அதே சமயத்தில் தாரும் மாலையும் மயங்கி விடுவதற்கு இடங்கொடாமல் 'விச்சுளி பாய்ந்து' எழும்பிக் கலையுலகத்திற்கு உயர்த்திச்செல்வது மாதவியின் பொறுப்பாகி விடுகிறது! ஆம்! மாதவி தன் வழி முதலாளான ஊர்வசிக்கு ஏற்பட்ட அனுபவத்தை மறந்துவிட முடியுமா? கலையிலே காதல் புகுந்து கலப்பதைத் தடுத்து நிறுத்தத் தவறியதால் வந்த வினை தானே இன்று மாதவியைப் பூம்புகாரிலே நடமாட விட்டிருக்கிறது? மாதவியை அறிமுகப் படுத்தும் விஞ்சையன் போன்றவரும்,

"ஆயிரங் கண்ணோன் செவியகம் நிறைய
நாடகம் உருப்பசி நல்கா ளாகி
மங்கல மிழப்ப வீணை; மண்மிசைத்
தங்குக இவள்எனச் சாபம் பெற்ற
மங்கை மாதவி வழிமுதல் தோன்றிய
அங்கரவு அல்குல்..............."

என்று தானே நாவசைத்துப் பேச வேண்டியுள்ளது? வாழ்க்கைக்குப் பொருள் இலக்கணம் காணாத இமயம் வளர்த்த பண்பாட்டிலாவது 'இந்திரனவை நிகழ்ச்சிக்கு' இடமிருக்கலாம். ஆனால் திருமுனி தமிழ் ஆய்ந்த தெய்வ மால் வரையாம் பொதியில் பண்பாட்டில் பூத்தெழுந்த பூம்புகாரில் கலை-காதல் குழப்பத்திற்கும் இடம் இருக்கலாமா? மாதவி தொழுது மலர்க்கையில் ஏந்தியிருக்கும்,

'மைத்தடங் கண் மணமகளிர் கோலம் போல் வனப் பெய்திக்'

கலைமணம் கமழ்ந்து கொண்டிருக்கும் யாழ் மங்கலம் இழந்து போவதை அவளால் நினைக்கவும் முடியவில்லை. ஊர்வசி செய்த அதே பிழையைச் செய்வதற்குத்தானா அவள்,

"ஆடலும் பாடலும் அழகும் என்றிக்
கூறிய மூன்றின் ஒன்றுகுறை படாமல்
ஏழாண்டு இயற்றி ஓர்ஈ ராண்டில்"

கோவலனைக் கூடிக் குடும்பப் பொறுப்பை ஏற்றது? தன் கலையுள்ளத்தோடு இணைந்து இசை எழுப்புவான் என்று அவள் எதிர்பார்க்கும் சூழ்நிலையிலும் அவள் உடல் அழகால் தன் நிலை மயங்கி,

"வடங் கொள் முலையான் மழை மின்னுப் போல
நுடங்கி உகும் மென் நுசுப்பு இழவல் கண்டாய்"

என உணர்வெழுப்பி நிற்கும் அவன் குறிப்பை உணர்ந்து கொண்ட மாதவி,

"மன்னும் ஓர் குறிப்பு உண்டு இவன்
தன்னிலை மயங்கினான்"

என்று தானே நாகரிகமாகக் கூறுவாள்!

## கோவலன் குறிப்பும் மாதவி நடிப்பும்

'இங்குத் தன்னிலை மயங்கினான்' என மாதவி கொண்டதை உரையாசிரியர்கள் 'தன்மேல் அன்பிலன் என உட்கொண்டு' புலந்தாள் எனப் பொருள் கொள்வது சிறிதும் ஒவ்வாது. நிலை மயங்கியதற்காகத் தான் கொண்ட புலவியையும் அவனிடம் காட்டிக் கொள்ளாமல், தானும் அவன் குறிப்பிற்கு இணங்கும் குறிப்பினள் போல் தன் இரு கயல் விழியால் அவன் நோய்க்கு மருந்தாக நோக்குவாள் போல் நோக்கித் தன் எழுதரு மின்னிடை இழவலைத் தடுத்துக் காப்பாளாய்த் தன் உடல் பாரத்தை அவன்மீது படர்ந்து சுமத்துவாள் போல் நடித்து அவன் கையிலிருந்த யாழை வாங்கித் தானும் அவனைத் தழுவிக் கூடத் துடிக்கும் ஒரு குறிப்பினள் போல்,

"நிலத் தெய்வம் வியப்பெய்த நீள் நிலத்தோர் மனமகிழக்
கலத்தொடு புணர்ந்து அமைந்த கண்டத்தால் பாடத்......"

தொடங்கினள். கலை என்பது படைப்போனின் எண்ணத்தைப் படிப்போர் அல்லது கேட்போர் பெறும்படி செய்வதேயாகும்: கோவலன் 'மாதவி மனமகிழ'த் தான் யாழ் வாசிக்கத் தொடங்கினன். ஆனல் அவன் தொடர்ந்த கலைப்பாதையில் செல்லாததால் அவன் கொண்ட எண்ணம் ஈடேறவில்லை. மகிழ்வாள் என்று எதிர்பார்த்த மாதவியும் உட்புலந்து அவன் கலையினைத் திறனய்ந்து காட்டித் திருத்த வேண்டிய ஒரு நிலை ஏற்பட்டுவிட்டது. ஆம்! கணவன் கங்கை தன்னைப் புணர்ந்த நாளிலும், கன்னி தன்னைப் புணர்ந்த நாளிலும் அவற்றையெல்லாம் கண்டு கொள்ளாது காலத்தை ஓட்டும் காவிரிப் பெண்ணைப் பாராட்டும் ஓர் உள்ளம் நெறி பிறழ்ந்த காமத்துக்கு இடங்கொடுத்துக் களங்கமுறும் உள்ளமாக இருக்குமே தவிரக் கலையுள்ளமாக ஒரு நாளும் இருக்க முடியாது!

"புகழ்புரிந்த இல்லிலோர்க் கில்லை இகழ்வார்முன்
ஏறுபோல் பீடு நடை"

என்ற பண்பாட்டு மொழி பெண்களுக்கு மட்டும் தான அறமுரைக்கின்றது? இதோ கோவலன் கண்ட காவிரிப்பெண்ணைக் கலைக் கோணத்தில் நின்று மாதவியும் காண்கிருள். ஆனல், கணவன் செய்கை கண்டு புலவாது கண்மூடிச் செல்லும் காவிரியாக அவள் கண்ணுக்குத் தோன்றவில்லை. மாருக,

"மருங்கு வண்டு சிறந்தார்ப்ப மணிப் பூ வாடை அது போர்த்துக்
கருங் கயற்கண் விழித் தொல்கி"

நடந்து செல்லும் காவிரியாகவே அவள் காண்கின்ருள்? அத்தகைய நிமிர்ந்த நடையும் நேர் கொண்ட பார்வையும் காவிரிப் பெண்ணுக்கு எப்படி வந்து பொருந்தின? ஆம், மாதவியே தன் கலைக் கண்கொண்டு காண்கின்ருள்; கண்டு தெரிந்து வாழ்த்துகிருள்.

"கருங்கயற்கண் விழித்தொல்கி நடந்த வெல்லாம் நின் கணவன்,
திருந்து செங்கோல் வளையாமை அறிந்தேன் வாழி காவேரி."

செங்கோல் வளையாமல் பார்த்துக் கொள்வது திங்கள் மாலை வெண் குடையானுக்கு வேண்டப்படுவது என்ருல் திங்கள் முகத்தாள் திருமுன் நின்று கலைக்கோலை வளையாமல் பார்த்துக் கொள்வதும் கலைநெறி நிற்கும் கோவலனுக்கு வேண்டப்படும் ஒன்று என்பதைச் சொல்லவும் வேண்டுமோ?

**கலை இழையும்; காமம் குதிக்கும்!**

கலை இலக்கணம் பிறழ்ந்து காமத் தீ மேலோங்கி விட்ட நேரத்தில் அமைதியாகக் கருத்துக்கள் இழைந்து வழிய மாட்டா; படபடவென்றே பாய்ந்து தாவிக் குதிக்கும்.

"தவள முத்தும் குறுவாள் செங்கண்
குவளை அல்ல கொடிய கொடிய"

"அன்னம் நடப்ப நடப்பாள் செங்கண்
கொன்னே வெய்ய கூற்றம் கூற்றம்"

"புள்வாய் உணங்கல் கடிவாள் செங்கண்
வெள்வேல் அல்ல வெய்ய வெய்ய"

என்ற கோவலன் பாடலைக் கேட்ட நாம் அவன் ஆற்றுமை மீதுற்று அவசரப்படுகிறான் என்பதை அறிந்து கொள்கின்றோம். ஆனால், 'கொடிய கொடிய' என்று கோவலனால் குற்றம் காட்டப் பெற்ற அந்தப் 'புண்தோய் வேற் கண்கள்' காதல் குளமாகிக் கசிந்து நீர் மல்குவதைக் கற்பனையில் குழைத்து,

"வண்டால் திரை யழிப்பக் கையால் மணல் முகந்து மதிமேல் நீண்ட
புண்தோய் வேல் நீர்மல்க மாதர் கடல் தூர்க்கும் புகாரே எம்மூர்"

என்று மாதவி பாடும்போது கலைவளம் அலைகொழிப்பதையும் கேட்கின்றோம்!

"மாரிப் பீரத்து அலர் வண்ணம்
மடவாள் கொள்ளக் கடவுள் வரைந்து
ஆரிக் கொடுமை செய்தார் என்று
அன்னை அறியின் என் செய்கோ"

என்று மாதவியின் கலையுள்ளம் தளர்ந்து தள்ளாடி நடக்கின்றது. ஆனால் கோவலனின் காய்ச்சல் உள்ளமோ அவன் நிலைக்கிரங்கும் பண்பில்லாமல்,

"ஊர் திரை நீர் வேலி உழக்கித் திரிவாள் பின்
சேரல் மடவன்னம் சேரல் நடை ஒவ்வாய்"

என்று காமச் சிந்து பாடுகிறது! இதே சிந்தும் கலையுள்ளத் தோடு கனியப் பாடினால் எவ்வளவு இனிமையைச் சிந்தும் என்பதை மாதவியின்,

"அடையல் குருகே அடையல் எம் கானல்
அடையல் குருகே அடையல் எம் கானல்
உடை திரை நீர்ச் சேர்ப்பற்கு உறுநோய் உரையாய்
அடையல் குருகே அடையல் எம் கானல்"

என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது! எல்லாவற்றிற்கும் சிகரம் வைத்தது போல்,

"காலை மலர்ந்து பகலெல்லாம் போதாகி
மாலை மலரும்இந் நோய்"

என்று வள்ளுவரும் பாராட்டும் மருள் மாலையை மாதவி தன் கலத்தொடு புணர்ந்தமைந்த கண்டத்தால்,

"பையுள் நோய் கூரப் பகல் செய்வான் போய் வீழ
வையமோ கண் புதைப்ப வந்தாய் மருள்மாலை
மாலை நீயாயின் மணந்தார் அவராயின்
ஞாலமோ நல்கூர்ந்தது வாழி மாலை"

என்று பாடும்போது உலகமே நல்கூர்ந்துவிட்டதை நாமும் உணர்கின்றோம். ஆம், மாதவி உணர்ந்து மொழிப்படுத்தி உணர்த்த விரும்பியதை நாமும் உணர்கின்றோம். அதுதான் கலை! கானல் வரி பாடிய மாதவி கோவலன் தன் குறிப்பிற்கு இணங்கித் தன் வழி முதலாள் ஊர்வசி செய்த தவற்றைத் தானும் செய்து விடாமல் நம் செவியகம் நிறையக் கலையமுதை நல்குகிறாள்! நிலத் தெய்வமே வியப் பெய்தியது; நீள் நிலத்தோரே மனமகிழும்போது அவருள் ஒருவனான கோவலனும் கலை மாதவியின் குரல் கேட்டு மகிழ்ந்திருக்க வேண்டும். காதல் மாதவியை இழுத்து அணைத்துக் கொண்டு,

"ஊடலில் தோற்றார் வென்றார்"

என்று மனமகிழ்ந்து 'பொழுது ஈங்குக் கழிந்ததாகலின் எழுதும்' என உடனெழுந்து மாதவி தன் மனை புகுந்திருக்கலாம்.

**மாதவி ஒன்றின்மேல் மனம் வைத்தாள் ?**

மாதவியின் கலைத்திறமும் கற்பனையுள்ளமும் தன்னால் எட்டியும் பிடிக்க முடியாது என்பதைக் கோவலன் கானல் வரிப் போட்டியில் நேருக்கு நேர் கண்டு விட்டான். மாதவியின் கலை முன்னர்த் தன் உருவம் சிறுத்துத் தோன்றுவதை உணர்ந்தான். அவள் கற்பனை அவனுக்குப் பெரும் 'பொய்யாகத்' தோன்றியது. அவள் கலைத்திறம் அவனுக்குப் பெரும் 'மாயமாகத்' தெரிந்தது. தன்னை வென்று தாழ்த்த வேண்டும் என்ற ஒன்றையே மனத்துட் கொண்டு அவன் வார்த்தைகளிலேயே கூறினால்—'தான் ஒன்றின் மேல் மனம் வைத்து'—அவள் திட்டமிட்டுச் செயல்பட்டிருப்பதாக அவனுக்குப் பட்டது. மாதவியை வியந்து பாராட்டும் பெருங் கூட்டத்தில் தான் இனியும் ஒருவனாக இருத்தலை அவன் உள்ளம் விரும்பவில்லை. விடுதலை அறியா விருப்பினை வெட்டிக் கொண்டு 'விடு விடு' என்று நடந்து வெளியேறி விட்டான்.

"கானல் வரி யான்பாடத் தான் ஒன்றின் மேல் மனம் வைத்து
மாயப் பொய் பல கூட்டும் மாயத்தாள் பாடினள்"

எனக் குமுறிப் பொங்கும் கோவலனுக்காக நாம் இரங்கவே செய்கின்றோம். இருந்தாலும் கோவலனுடைய பாட்டைக் கேட்ட மாதவி 'இவன் வேறு மகளிர்பால் விருப்புடையன்' என எண்ணினள் என்றும் அதனால் தானும் வேறு ஒருவன் மேல் விருப்புடையள் போல் பாடினள் என்றும், அது கேட்ட கோவலன் தானல்லாத வேறொருவன் மேல் மனம் வைத்து அவள் பாடினள் என்று எண்ணி வெறுத்து நீங்கினன் என்றும் விளக்கவுரை தரும் அளவிற்கு இங்குக் குழப்பம் எதுவும் நேர்ந்து விடவில்லை! இவ்வளவிற்கும் 'மன்னுமோர் குறிப்புண்டு இவன் தன் நிலை மயங்கினன்' என்று தான் மாதவி எண்ணினள். 'கானல் வரியான் பாடத்தான் ஒன்றின் மேல் மனம் வைத்து'ப்..........பாடினள் என்று தான் கோவலனும் எண்ணினன்; 'மன்னும் ஒரு குறிப்பு' என்பதை 'வேறு ஒருத்தி மேல் காதல் உண்டு' என்றோ, 'ஒன்றின் மேல் மனம் வைத்து' என்பதை 'வேறு ஒருத்தன் மேல் மனம் வைத்து' என்றோ பொருள் கொள்வது அறத்திற்கே அடுக்காத ஒன்றாகும்! அடிகளாரின் கலையுள்ளத்திற்கும் பொருந்தாத ஒன்றாகும்!!

கலைக்கல்வியா குலக்கல்வியா ?

மாதவியின் கலைத்திறம் அவள் ஏழாண்டு பயின்று கற்றுக் கைவந்தது என்பதனை மறுப்பார் இலர். அதனைப் பாராட்ட உளமில்லாத கோவலன் வயந்தமாலை எடுத்துச் சென்ற மாதவியின் கடிதத்தை மறுத்து அவள் தன் வரிப்பாடல்கள் யாவும்,

"ஆடல் மகளே யாதலின்..........
பாடு பெற்றனஅப் பைந்தொடி தனக்கு"

எனப் பேசுவதும் கலைத்திறத்தைக் 'குலத்திறம்' என்று பேசும் பொருளற்ற பேச்சேயாகும்! கோவலன் தன் மனை புகுந்த கண்ணகியின் வாடிய மேனியையும் வருத்தத்தையும் கண்டு,

"குலந்தரு வான்பொருள் குன்றம் தொலைத்த
இலம்பாடு நாணுத் தரும்"

என்று தன் நிலையை எடுத்துக் கூறும்போதும் முன்னர் அவன் உள்ளத்தில் 'மாயப்பொய் பல கூட்டும் மாயத்தா'ளாகப் 'பேருருவம்' பெற்றுப் பதிந்து விட்ட கலை மாதவியைப் புரிந்து கொள்ள முடியாத நிலையில்தான் வேறு வார்த்தைகளால்,

"சலம் புணர் கொள்கைச் சலதி"

எனச் சுட்டுகிறான். இங்கும் கற்பனையில் தன்னாலும் ஆழங் காண முடியாத அளவிற்குத் தோய்ந்திருக்கும் அவள் பண்பையே 'சலம்புணர் கொள்கை' எனக் குறிக்கின்றான். கடலாகப் புகழ் பரப்பி அலைகொழிக்கும் கலையுள்ளம் படைத்த மாதவியையே 'சலதி' என்று மருண்டு பேசுகிறான்!

**கோவலன் தெளிவு!**

இறுதியாக மாதவி எழுதிய இரண்டாவது கடிதத்தில் அவள் 'அடிகள் முன்னர் யான் அடி வீழ்ந்தேன்' எனத் தொடங்கித் தான் அவனைக் கலை நெறிச் செலுத்தும் ஒரே நோக்கோடு கற்பனை குழைத்துப் பாடியவை தவறாக இருந்தால் அவற்றை வடியாக் கிளவிகள் என மனத்தே கொள்ளல் வேண்டும் என்று அவள் எழுதிய எளிய மொழி அவனுக்கு 'இசைமொழி'யாகப் பட்டது. அவள் தவறிலள். தன்னைத் தோல்வி காணச் செய்யும் திட்டத்தின் மேல் அவளுக்கு என்றும் மனம் இருநததில்லை எனவும், உண்மையறியாது இசை மொழியாளை 'மாயப்பொய் பல கூட்டும் மாயத்தாள்' என்றும், 'சலம் புணர் கொள்கைச் சலதி' என்றும் வசை மொழியாளாகக் கொண்டது தன் தவறே எனவும் தெளிந்தான். ஆம், கோவலன் பொய்தீர் காட்சிப் புரையோனாகி விட்டான்; இனியும் கலையை மாயம் என்றோ மருள் என்றோ வெறுத்து ஒதுக்கும் மனநிலையைக் கொண்டிருக்க மாட்டான் என்பதைப் பெண் தெய்வத்தின் வெற்றியைப் பாடும் பாணரில் அவனும் பாங்குறச் சேர்ந்து "செந்நிறம் புரிந்த செங்கோட்டு யாழின்" இசையெழுப்பி மகிழ்வதால் அறிகின்றோம்.

**உரையாசிரியரின் புண்ணியம்**

கலையை அச்சாகக் கொண்டு சுழலும் சிலப்பதிகாரத்தின் திருப்பு மையமாகத் திகழும் கானல் வரி கலைப்போட்டியே! காதல் போட்டி அன்று! கலைப் போராட்டத்தைக் காதல் போராட்டமாக உரையாசிரியர்கள் பேசுவது அவர்கள் தம் மனவளக் குறைவையே காட்டுகிறது! விளைவு; உண்மைச் சிலம்பு மறைந்தது. சிறுமி கண்ணகியும், அவள் கையில் மாங்கனியைத் தந்து மாலையிட்ட கோவலனும், அவனிடம் கப்பல் கப்பலாகப் பொன் பெற்றிருந்தும் இறுதியில் அவனை வெறும் சட்டையுடன் 'தாசிகள் நேசம் மோசமே!' என்னும் 'நடுத்தெருவரி'பாட நடமாட விடும் மாதவியும் தமிழ்நாட்டு நாடக மேடையில் காட்சி தரத் தொடங்கினார்கள்.

———

## வண்ணச்சரபம் அருள்மிகு தண்டபாணியடிகள் வரலாற்றிற் சுவையான நிகழ்ச்சிகள் :

### வேலவன் விபத்து விலக்கல்

[தி. செ. முருகதாச சுவாமிகள்]

அடிகள் நம் தமிழ்நாட்டில் மட்டுமின்றிக் கேரள நாட்டிலும் சென்று தமிழ்ப் பாடலியற்றி வந்துள்ளனர். திருவனந்தபுரத்து பத்மநாபப் பெருமாள்மீது யமகஅந்தாதி ஆதிய பாடி யிருக்கின் றனர். வேற்பூசையைக் கையிற் பொருளிருப்பின், மிகச் சிறப்பாகச் செய்வார். பூசையில் மிக்க பேரார்வமுடையவர். நானிலைச் சதகம் என்ற நூல் ஒன்று சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நிலைகளைப்பற்றிக் கூறி வருமுறையில், கிரியையான வழிபாட்டினைக் கூறும் சமயம்.

"பூசைசெய்யும் பேராசை யில்லா தார்க்குப்
புகழில்லை, கல்வி யில்லை, போதமில்லை
ஓசைபடு தோத்திரம்மந் திரங்க ளெல்லாம்
உறுப் பென்றே கொளவேண்டும்; உலகோர் போற்றும்
காசையொரு பொருளாக மதித்து வீணே
கழிவுபடக் கூடாது, கையில் உண்டேல்
தோசைவடை அன்னமுதற் பலவுஞ் செய்து
துகளில்பஞ்ச வாத்தியமும் தொகுக்க லாமே."

பஞ்ச வாத்தியம் - ஐங்கருவிகள். இவை, தோல், துளை, நரம்பு, கண்டம் (கழுத்து), கஞ்சம் (வெண்கலம்) ஆம். தோலாலானவை, மத்தளம், உடுக்கை, கஞ்சிரா ஆதியவும், துளையாலானவை, புல்லாங்குழல், நாதசுரம் ஆதியனவும், நரம்பாலானவை, யாழ் முதலியவும், கஞ்சம், வெண்கலத் தாலானவை தாள முதலியவும், கழுத்தின் ஓசையின்மூலம் பாடுதலுமாமென்க. பல என்பதால், அலங்காரப் பந்தல், வருவார்கட்கு உண்டி, வழிபாட்டுக்குரிய யாவும் கொள்ள வேண்டும். இப்படிப் பலகாலம் செய்தனர்.

"ஒருதினம்பெரும் பூசைசெய்(து) உடலிளைப்
புடனிருந் திடும்வேளை"

என்று கூறுவதால், உடலில் இளைப்பு வரும்படி வழிபாடியற்றிய சிறப்பினைக் காண்கிறோம். அந்த நேரம் முருகன் மனவெளியிற் றோன்றியருளிய விவரம் கூறுகின்றனர். குருமகிமை யுணர்ந்த சருக்கத்தில், மேலும் மேலே கூறியபடி பெருமளவில் அபிடேகம் அலங்கார முடித்து வெளியே வந்த சமயம், வானமுற்றும் கருமுகில் சூழ்ந்து, இடியும் மின்னலு முழங்கின. மழை பெய்யு மானால் வந்தவர் இருக்கவும் உணவருந்தவும் முடியாது. இதனையுணர்ந்த அடிகள், இறைவனைத் தியானித்து, ஒரு துளி

மழைநீர் வீழினும் இந்த அலங்காரம் யாவையும் என் கையாலேயே அழிப்பேன் என்று கூறினர். அருகிருந்தோர் என்ன] நேருமோ என்றஞ்சினர். ஆனால் எப்படியோ அவ்வளவு கருமுகிலும் மறைந்தன. வழிபாடு முதலியன சிறப்பாக நடைபெற்றன. இவ் விவரத்தை,

பொன்னாற் செய்த யந்திரத்திற்
 பொருப்புத் தொறும்வாழ் புகழ்க்குமரன்
கன்னா றெழுத்தும் அறுகோணச்
 சக்க ரமும்நன் கெழுதிஅதை
என்னா சையினாற் பூசிக்க
 எண்ணிப் பலகும் பழம்மலரும்
நன்னா கரிக நிவேதனமும்
 நளிர்பூம் பந்தர்ப் பெருஞ்சிறப்பும், 1

தோலா தியஙங் கருவிகளும்
 தொகுத்துத் தூபம் துவக்குமுனம்
ஆலா லம்போற் கருநிறத்த
 தாகி மேகம் அகல்வானின்
மேலா வந்து மழைபொழியும்
 விதம்காட் டியது நீர்விழில்இக்
கோலா கலத்தை யானேமுற்
 குலையப் புரிவே னென்றேனல். 2

எண்ணில் கவிகள் வரைந்திருக்கும்
 ஏட்டைக் கிழிப்பேன் என்றாலும்
நண்ணி ஒருசற் றருள்புரியா
 ஞாங்கர்ப் படைவேள் எதனாலோ
திண்ணி யரும்மற் றஏனையரும்
 தெரிந்து வியக்கச் சிறுதுளியும்
மண்ணில் வீழா வாறருளி
 மலர்ப்பூ சனையேற்(று) உவந்தானே. 3

—புதுவைச் சருக்கம்

என்பதால் அறியலாம்.

கையிற் பொருளிராவிட்டாலும் கடன் பெற்றேனும் பூசனை செய்வார். 'அந்தப் பெரும்பூசனையால் மிக்கு அம்பொற்கடன் வந்தது' என்கின்றனர். பொருட்கடன் பெற்றேனும், வழி பாட்டுக் கடனைச் செய்ய விரும்பினர். 'நின் வலக்கை தாங்கும், மின்னவிர்வேற் பூசனைக்குச் செலவிடுவேன் இது சரதம், வீண் பேச்சல்ல'' என்பர். ஒரு சமயம் தேவகோட்டையில் சிதம்பரம் செட்டியாரென்பவர் எழுநூறு ரூபாய் உதவினர் என்று கூறிய அடிகள்,

'என்னகம் விழைந்த படிஇர சிதக்கா(சு)
 ஏழு நூ றீந்தனன், அதுகண்டு
அன்னவன் இனத்தார் களுஞ்சில வூரில்
 ஆளமட் டுதவினர்; அந்தப்

பொன்னனைத் தையும்நான் போற்றிவைத் தில்லேன்
பூசைமிக் கியற்றி, ஆங்கு அடியார்க்கு
அன்னமும் துகிலும் அளித்தழித் திட்டேன்
அதன்பினும் கடன்வினைந் ததுவே'
—நாட்டுக் கோட்டைச் சருக்கம்.

இவ்வாறுள்ள நாளொன்றில் முருகன் நாளைத் தினம் பொருள் தருவேனென்றனர். நெல்லையினின்றும் புறப்பட்டு, கேரளநாடு செல்லக் கருதினர். வள்ளியூர் முருகனை வழிபட்டனர். திருவனந்தபுரம் சென்று பத்மநாபப் பெருமானைப் பாடிப் பரவினர். அங்கிருந்த அரசன் தமிழறியாதிருந்ததால், மனம் விரும்பாமல், பொதியை மலையை வலமாக வரக் கருதினர். வள்ளம் என்ற சிறு தோணியின் வழியாக, கடல்வழிப் பயணமாயினர். அப்படி வரும் சமயம் விபத்தொன்று ஏற்பட்டது. அஃதாவது அந்தத் தோணி மரத்தாலானது, பழைமையானது. அதனடிப் பகுதியில் பெருவிரல் இட்டு எடுக்கும்படியான ஓட்டை விழுந்தது. நீர்க்கசிவு மேலெய்தியது. தோணியில் இருந்த சிலர் துணைகொண்டு துணியாலடைத்தும், நீரைப் பிழிந்தெடுத்தும், கனமான சாதனத்தை வைத்தும், நீர் மேலேருமற் செய்தனர். இருப்பினும் அடிப்பக்கமிருந்து தோணி செல்லும் போது நீர் ஏறியது. உடனிருந்தவர் உயிரை வெறுத்தனர். அடிகள் மட்டும் அயராது பணியில் ஈடுபட்டனர். குடும்பிகளான நாங்கள் உயிரை வெறுத்தோம் துறவியான உமக்கேன் இவ்வளவு உயிராசை என்றனர். யாதாயினும் நம் கடமையைச் செய்வோமென்று செய்தனர். சிலர் சில சமயம் ஏற்றுச் செய்வார்கள். சினந்தும் பேசினர். இந் நிலையில் அடிகள் முருகனை நோக்கி மனமுருகி நினைந்து வழிபட்டனர்.

தோணி செலுத்துவோர் கட்குடிவெறியில், கரைப்பக்கம் செலுத்தாமற் கடற்பக்கம் செலுத்தினர். ஒரு பாறையில் ஓடம் மோதியது. உடையாதது திருவருட் செயல். அப்போது அங்கே தெய்வக் குரல் ஒன்று, அடே, கரைப்பக்கம் செலுத்து, கடற்பக்கம் செலுத்தாதே என்று ஒலித்தது; வழிகாட்டும் வான் பொருள். குடிமயக்கம் தெளிந்தான் ஓடம் விடுபவன். அஞ்சேல், உனது திருநீற்றுக் கோயில் (விபூதிப்பை) வடிவமாய் உன்னிடம் உள்ளேன் என்று மனவெளியிற் காட்சி வழங்கி ஓதினன் முருகன். ஓடம் கரை வந்தது. சூரியன் உதயமானுன். இவ்விவரம் அடிகளின் வாயிலாகவே அறியலாம். பாட்டின் யாப்பழகையும் உணர்ந்து மகிழலாம்.

"சேட்டைமிகும் சாராயக் குடிவெறியர்
ஓடம்விடும் சிறுவர் ஆட்டை
மாட்டைவதைத் துன்போர் ஆங் குடன் உறைவோர்
காயல்குட்டி வாரி போல்வ(து)
எட்டைஎமன் எடுத்தான்கொல் எனுமாறு
பெருவிரல்இட் டெடுக்கத் தக்க
ஓட்டையொன்றும் விழுந்த(து)இருட் டிரவுவிளக்
கில்லையென்னென் றுரைப்பே னம்மா"

வத்திரத்தைக் கிழித்தந்தத் தமரடைத்து
நீர்க்கசிவு மலியுந் தோறும்
கைத்திறத்தால் இறைத்தார்கள்; அதுநடத்தச்
செய்வதுநம் கடமை யாயிற் று)
எத்திறத்தென் றிடில்வெறியின் கொடுமையால்
ஒருவேளை ஏற்றுச் செய்வார்
தத்திஅரா எனச்சினப்பார், ஒருவேளை
துதியும் சொல்வார்.

உடனிருப்போர் உயிராசை இனிநமக்கா
காதெனச்சொற் றுட்கிப் போனார்
படபடென நீரிறைக்க முயலெலேச்சில்
கால்சலிக்கப் பழித்தும் சொன்னார்
மடமடெனக் கொண்டொருகற் பாறையிற்றாக்
கினன்உடைந்து மலர வில்லை
கடவுள்மறை நன்றறிவா ரினுங் கயவர்
மேலெனும்சொல் கவினக் கண்டேன்.

மற்றொருபே ரோட்டையொன்று விழுந்தாலும்
அங்கு மிகவசிப்ப வான
பற்றொருவாய் முதலைகட்கும் மீன்களுக்கும்
உணவுநன்றாய்ப் பலிக்கும்; உள்ள
கற்றொறும் ஆ டிடுவானோ வேறெந்தக்
கடவுளோ காத்தான் அன்றி
சற்றொளிர்சிற் றறிவுமின்றிப் புதிதாய்அவ்
ஓடமதைத் தள்ளும் பொல்லார்.

கடலினுக்குப் போம்வழியிற் கடவினர்
அவ்விருளிற் கரைமேல் வின்(று)ஓர்
திடமனத்தான் வைதுகரை திருப்பிவிட்டான்."

திருநீறு இட்டுஓர் மெய்த்தவசி ஒருவன் வந்
தூன் விபூதிக் கோயிலின் வடிவா மேவினேன் என, சத்தமிட்டு
மறைந்தான்"

என்றவாற்றால் அறியலாம்.

———

# மொழியும் விழியும்

**(தமிழ்—ஆங்கிலம் மொழிப் போரின் முடிவு)**

**[புலவர். கோ. இளையபெருமாள், ஆரணி, வ. ஆ.]**

(ஆங்கிலம்)

ஓங்கியசீர் பெற்றிடும்யான் உலகினரின் கண்ணே
ஆங்கிலமென் பெயரதனை அறிகதமிழ்ப் பெண்ணே.

(தமிழ்)

இயலிசைநா டகமாகி இருந்திடுமென் முன்னே
அயல் மொழியாய் வந்தவுனக் காணவமும் என்னே.

(ஆங்கிலம்)

ஆட்சிமொழி யாயிருந்தேன் அரசியலில் யானே
மாட்சியினை அறிந்தனையேல் மதித்திடுவாய் தானே.

(தமிழ்)

வெள்ளையரின் ஆட்சியிலே வீறுபெற்று நின்ருய்
கொள்ளையர்கள் போயினபின் குரலிழந்து சென்ருய்.

(ஆங்கிலம்)

அறிவியலின் புதுமைகளை ஆக்கியதும் என்ருல்
பொறியியலின் திறமனைத்தும் புலப்படுமென் பின்ருல்.

(தமிழ்)

பொருளுணர்த்தும் இலக்கணநூல் புகுந்ததுவும் என்பால்
அருளுணர்த்தும் நூல்பலவும் அளித்திடுவேன் அன்பால்.

அகவாழ்வும் புறவாழ்வும் அமைந்துளதும் எங்கே
புகலடைந்த ஆங்கிலமே பொருளீட்டல் இங்கே.

ஆதிமகன் பேசியதும் அருந்தமிழே யாகும்
நீதியற்ற நின்பேச்சால் நெஞ்சுடைந்து போகும்.

(ஆங்கிலம்)

ஒழுங்குமுறை என்மொழியை ஓதுவதால் உண்டாய்
வழங்குவரே ஆட்சியினில் வையமெலாம் கண்டாய்.

(தமிழ்)

பிழைக்கவந்த மொழியுனக்குப் பெருமையொரு கேடே
ஒழுக்கநெறி போதுவதும் உயர்தமிழ்நூல் ஏடே.

(ஆங்கிலம்)

பிறமொழியின் துணையின்றிப் பேசுவதற் கில்லை
உறவுடனே வாழ்ந்திடவே உதவுவதென் சொல்லே.

(தமிழ்)

தனித்தியங்கும் ஆற்றலுடைத் தமிழ்மொழியென் பேரே
இனித்தமுடை யெனைவிரும்பி யாவருங்கற் பாரே.

வந்தவரை வரவேற்று வாழவைக்கும் நாட்டில்
பைந்தமிழின் உரிமையினைப் பறித்துயர்ந்தாய் மேட்டில்.

(ஆங்கிலம்)

உன்பெருமை உணராமல் உரைத்ததனை மறப்பாய்
இன்பமுற இருவோரும் இணைந்துறைவோம் சிறப்பாய்.

(தமிழ்)

தாய்மொழியாய் அரியணையில் சார்ந்திருப்பேன் பாராய்
சேய்மொழியாய் வந்தவுனைச் சேர்த்தணைப்பேன் வாராய்.

(முடிவு)

இருமொழியும் இருவிழியாய் எண்ணியவை கற்பார்
ஒருமையுடன் வாழ்க்கையினில் உயர்ந்தோங்கி நிற்பார்.

———

## கருமுத்து தியாகராசச் செட்டியாரவர்கள் மறைவு குறித்த இரங்கற்பாக்கள்

[பண்டித வித்துவான் ச. சாம்பசிவன், எம். ஏ.]

''மலையென உயர்ந்த தோளான்
மற்றவர்க் குதவி செய்வான்
கலையெலாந் தெரியக் கண்டான்
கற்றவர் நாவில் நின்றான்
அலையெனத் திரண்ட கூட்டம்
ஐயவென் றரற்று மாறு
மலைமகள் பாகத் தானின்
மலரடி சேர்ந்தா னன்றே! (1)

''கடலிலே பிறக்கும் முத்தால்
கடலுக்கு என்ன நன்மை?
கடலெனப் பெருங்கு லத்தில்
கருமுத்துப் பிறந்தா னேனும்
கடலெனக் காட்சி நல்கும்
கனிதமிழ்க் குதவி னானே!
கடமென நின்ற முத்தைக்
காலனும் கவர்ந்திட் டானே!'' (2)

'''மன்னனே காப்பாற்று' என்றுகேட்கும்
மக்கட்குத் துணைபுரியும் மாமணிநீ!
கண்ணனும் இராதாவும் கலங்குமாறு
கைவிட்டுச் சென்றதுதான் நீதியாமோ?
அண்ணலார் சேவடிக்கீழ் அமரவெண்ணி
அவனிருக்கு மிடம்நாடிச் சென்றனையோ!
அண்ணலே! உன்றனது செய்கைகண்டால்
ஆவியெல்லாம் அலமந்து துடிக்குதையோ! (3)

''நீமறைந்தா யென்றென்றே இயம்புகின்றார்
நீமறைந்தா யென்பதைநான் ஒப்பமாட்டேன்!
நீயமைத்த கல்லூரிக் கட்டிடங்கள்
நிலையாகச் செய்திட்ட திருப்பணிகள்
நீயமைத்த நூற்பாலை, நூலகங்கள்
நித்தநித்தம் நின்னுருவைக் காட்டுமன்றோ!
நான்சமைத்த பாட்டினிலும் சொற்களிலும்
நாயகமாய் வீற்றிருக்கும் நாவலோனே!'' (4)

---

# செய்திகளும் குறிப்புகளும்

## மறைமலையடிகள் 98ஆம் பிறந்தநாள் விழாவும், மறைமலையடிகள் நூல்நிலயம் 16ஆம் ஆண்டு நிறைவு விழாவும்

31-8-74இல் இலிங்கிச் செட்டித் தெரு வள்ளலார் திருவருள் மண்டபத்தில் மறைத்திரு மறைமலையடிகளாரின் 98 ஆவது பிறந்தநாள் விழாவும், மறைமலையடிகள் நூல்நிலயத்தின் 16 ஆம் ஆண்டு நிறைவு விழாவும், மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றன.

கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் வ. சுப்பையா பிள்ளையவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். திருக்கோயில் ஆசிரியர் திரு. முருகவேள் மறைமலையடிகளின் சமயம் என்பது பற்றியும் திரு. பாவலரேறு பெருஞ்சித்திரனர் கவிதைகள் பற்றியும், சிலம்பொலி செல்லப்பன் கட்டுரைகள் பற்றியும் எழில் முதல்வன் கதை, நாடகங்கள் பற்றியும், தெ. ஞானசுந்தரம் ஆராய்ச்சி பற்றியும், கோ. இராமச்சந்திரன் நூல்நிலயத் தொண்டு பற்றியும் ஆய்வுரைகள் நிகழ்த்தினர். நூலகர் திரு முத்துக்குமாரசாமி நன்றி கூறினர்.

15—7—1976இல் மறைமலையடிகளார் நூற்றண்டு விழாவினைச் சிறப்பாகக் கொண்டாடத் திட்டமிடப்பட்டிருப்பதால் இவ்வாய்வுரைகள் அனைத்தும் தனி நூலாக அப்போது வெளியிடப் பெறும்.

## முதுபெரும் புலவர் மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்கள் 79ஆம் பிறந்த நாள் விழா

முதுபெரும்புலவர், சிந்தாமணிச் செல்வர், செந்தமிழ்க் களஞ்சியம், இலக்கணத் தாத்தா என்றெல்லாம் சிறப்புப் பட்டங்கள் பெற்றுள்ள உயர்திரு மே. வீ. வேணுகோபாலப் பிள்ளை அவர்களின் 79 ஆம் பிறந்த நாள் விழா 31—8—74 சனிக்கிழமை யன்று புரசை சுந்தரர் தமிழ்க் கல்லூரியில் டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் தலைமையில் சிறப்புற நடைபெற்றது. சிறுவை மோகன சுந்தரம், திரு எம். சுந்தரராஜ் F. A. & C. A. O.. S. Ry ஆகியோர் பாராட்டுரை வழங்கினர். வித்துவான் தி பாலசுப்பிரமணியம் நன்றி கூறினர். மகாவித்துவான் அவர்கட்கு இறைவன் மேலும் பல்லாண்டுகள் நல்வாழ்வருள இறையடிகளை இறைஞ்சுகின்றோம்.

## 'கம்பர் 1000' வெளியீட்டு விழா

2—9—74 திங்கள் மாலை 6 மணியளவில் சென்னை சேத்துப்பட்டு ஆரிங்டன் சாலை, கிறித்தவக் கல்லூரிப் பள்ளியில், சென்னைத் தமிழ் வளர்ச்சி மன்றத்தின் சார்பில், கவிஞர் அ. கு. ஆதித்தர் அவர்கள் தொகுத்த "கம்பர் 1000" என்னும் நூல் வெளியீட்டு விழா மருத்துவ மாமணி இரத்தினவேல் சுப்பிரமணியம் அவர்கள் தலைமையில் சிறப்புற நடைபெற்றது. மேதகு ஆளுநர் கே. கே. ஷா அவர்கள் நூலை வெளியிட்டுச் சிறப்புரை ஆற்றியதோடு நூலாசிரியருக்கு 'மகாகவி' மாராயம் அளித்தார்.

## திருக்குறள் மாநாடு

சென்னை, திருவள்ளுவர் மன்றத்தின் சார்பில் மன்றத்தின் 16ஆம் ஆண்டு விழாவும் திருக்குறள் மாநாடும் 30—8—74 முதல் 1—9—74 முடிய நடைபெற்றன. தமிழக உணவு அமைச்சர் மாண்புமிகு மன்னை நாராயணசாமி அவர்கள் மாநாட்டினைத் துவக்கி வைத்தார். மேலவைத் தலைவர் திரு சி. பி சிற்றரசு அவர்கள் மலரை வெளியிட, பேரவைத் தலைவர் புலவர் கோவிந்தன் அவர்கள் பெற்றுக் கொண்டார். நல்வாழ்வுத் துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் அன்பழகன் அவர்கள் பாராட்டுரை வழங்கினர். மாண்புமிகு முதல்வர் கலைஞர் டாக்டர் அவர்களும், மாண்புமிகு டாக்டர் நாவலர் அவர்களும் வாழ்த்துரை வழங்கினர். இவ் விழாவினையொட்டிக் கருத்தரங்கம், கவியரங்கம் ஆகியனவும் சிறப்புற நடைபெற்றன.

## அருள்மிகு கொளஞ்சியப்பர் பிள்ளைத்தமிழ் நூல் வெளியீட்டு விழா

திருவாமாத்தூர் வண்ணச் சரபம் தண்டபாணி அடிகளின் பெயரரும் கௌமார மடாலயத் தலைவருமான தவத்திரு தி. செ. முருகதாச அடிகள் இயற்றிய அருள்மிகு கொளஞ்சியப்பர் பிள்ளைத் தமிழ் நூல் வெளியீட்டு விழா 10-9-1974இல் விருத்தாசல வட்டம் மணவாள நல்லூரில் நடைபெற்றது. தமிழ்நாடு அறநிலையத் துறை அமைச்சர் மாண்புமிகு மு. கண்ணப்பன் அவர்கள் நூலினை வெளியிட்டார்கள். பெருமக்களும் அறிஞர் பலரும் பாராட்டுரை வழங்கினர்.

## தமிழ்ப் பேராசிரியர் திரு. சாம்பசிவனூர் எம்.ஏ. பட்டம் பெற்றூர்

மதுரைச் செந்தமிழ்க் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியரும், கழக நூலாசிரியரும் ஆன பண்டித வித்துவான் ச. சாம்பசிவன் அவர்கள் அண்மையில் நடைபெற்ற மதுரைப் பல்கலைக் கழக முதுகலைத் தேர்வில் (M. A.) முதல் வகுப்பில் வெற்றி பெற்றூர் என்ற செய்தி யறிந்து மகிழ்ச்சி யடைகிறோம். திரு. சாம்பசிவம் அவர்கள் கழகத்தோடு நெடுநாள் தொடர்புடையவர். அன்னாருக்கு எமது நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

## மணியாச்சி 'வீரவாஞ்சி' ஆகிறது

தமிழகத்திலுள்ள மணியாச்சி என்னும் தொடர்வண்டி நிலையத்தின் பெயரை, விடுதலைப் போராட்டத்தில் உயிரிழந்த வீரர் வீரவாஞ்சி அவர்களின் நினைவாக 'வீரவாஞ்சி' என மாற்ற வேண்டும் என்ற தமிழக அரசின் வேண்டுகோளுக்கு நடுவணரசு இணங்கியுள்ளது என்று 30-8-74இல் சட்டமன்ற மேலவையில் முதல்வர் டாக்டர் கலைஞர் தெரிவித்தார்.

## கட்டாய சேமிப்புத் திட்டம்

பணவீக்கத்தைத் தடுப்பதற்காகக் கட்டாய சேமிப்புத் திட்டம் என்ற முறையில், அரசுப் பணிமனைகளிலும் பிற பொது நிறுவனங்களிலும் வேலை பார்ப்போரின் ஊதிய உயர்வுகளில் ஒரு பகுதியைச்

சேமிப்பாக முடக்கி வைப்பதென மைய அரசு ஒரு சட்டமியற்றியுள்ளது. விலைவாசி உயர்வு ஒருபுறமும், கள்ள வணிகம்—கறுப்புப்பண நடமாட்டம் ஆகியன மற்றொருபுறமுமாக இருக்கும் நிலையில் இப்படிப்பட்ட சட்டத்தால் உருப்படியான பலனேதுமின்றித் தொழிலாளரும் நடுத்தர மக்களுமே அல்லற்பட நேரிடும்.

## தமிழ்நாட்டில் மீண்டும் மதுவிலக்கு

திருவள்ளுவர் நெறிகளைப் பின்பற்றி நடக்கும் தமிழக அரசு தமிழகத்தில் மீண்டும் மதுவிலக்கினைக் கொண்டு வந்து தமிழக மக்களின் நல்வாழ்த்துகளைப் பெறுகிறது. குதிரைப் பந்தயத்தால் பல்லாயிரக் கணக்கான மக்கள் தம் வீடுகளையும் செல்வங்களையும் இழந்து கண்ணீரும் கம்பலையுமாய் நிற்கும் நிலை நெஞ்சத்தை உருக்கும் காட்சியாகும். வரும் மார்ச்சுத் திங்களிலிருந்து குதிரைப்பந்தயம் தமிழ்நாட்டைவிட்டு நீங்குகிறது. பொருள் முட்டுப்பாட்டைக் கருதாமல் இவ்விரு செயல்களையும் துணிந்து செய்த தமிழக அரசினைப் பாராட்டுகின்றோம்.

## மாக்சேசே பரிசுத் திட்டம்

சிறந்த மக்கள்தொண்டு புரிபவருக்கு அளிப்பதற்கென மணிலாவில் "ரமான் மாக்சேசே பரிசுத் திட்டம்" என்ற பெயரில் நிறுவப்பட்டுள்ள திட்டத்தின்படி 1974ஆம் ஆண்டிற்குரிய பரிசுத் தொகையான 10 ஆயிரம் அமெரிக்க டாலர் (ரூ 75 ஆயிரம்) இசை வல்லுநரான திருவாட்டி எம். எஸ். சுப்புலட்சுமி அவர்கட்கு அளிக்கப்பட்டுள்ளது. தமக்கு அளிக்கப் பெற்றுள்ள இத்தொகையினை மூன்று பங்குகளாக்கி முறையே 'பாரதீய வித்தியா பவன்' 'வாலன்டரி ஹெல்த் சர்வீஸ்' கும்பகோணம் 'ராஜா வேத பாடசாலை' ஆகிய நிலையங்கட்கு நன்கொடையாக இவ்வம்மையார் வழங்கியுள்ளார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

## 'தேசியம் வளர்த்த தமிழ்' வெளியீட்டு விழா

தமிழகக் கல்வித்துறைச் செயலர் திரு. கா. திரவியம் ஐ. ஏ. எஸ். அவர்களால் எழுதப்பட்டுப் பழனியப்பச் செட்டியார் உடன் பிறப்பாளரால் அச்சிட்டு வெளிவந்துள்ள 'தேசியம் வளர்த்த தமிழ்' என்னும் நூல் வெளியீட்டு விழா 8—9—74இல், சென்னை நியூ உட்லண்ட்சு விடுதியில் சிறப்புற நடைபெற்றது. விழாவிற்கு நடுவண் அரசு தொழில் வளர்ச்சி, வேளாண்மைத் துறைகளின் அமைச்சர் மாண்புமிகு சி. சுப்பிரமணியம் அவர்கள் தலைமை தாங்கி நூலினை வெளியிட்டார்கள். தாமரைத் திரு நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள், டாக்டர் மு. வரதராசனார், திருவாட்டி சௌந்தரா கயிலாசம் ஆகியோர் பாராட்டுரை வழங்கினர்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக்கழகத்திற்காக
சென்னை-600001, 2-140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

# கழகப் புதிய வெளியீடுகள்

**கம்ப நாடர்**

பேராசிரியர் தி. செல்வக் கேசவராய முதலியார், எம்.ஏ.

இற்றைக்கு ஐம்பது ஆண்டுகட்கு முன் எழுதப்பெற்ற இந்நூல் கம்பரைப் பற்றியும் கம்பராமாயணத்தைப் பற்றியும் ஆராய்ச்சி செய்யும் வரலாற்றுராய்ச்சியாளர்கட்கும், இலக்கிய ஆராய்ச்சியாளர்கட்கும், எழுத்தாளர், பேச்சாளர் ஆகியோருக்கும் பெரிதும் பயன்படத் தக்கது. எனவே இந்நூல் அனைவருக்கும் பயன்படும் வகையில் புதிய திருத்தங்களுடன் அழகிய பதிப்பாக வெளிவந்துள்ளது. ரூ. 3 00

**கல்லாடம் உரை (முதல் 30 செய்யுள் மட்டும்)**

உரையாசிரியர்: பெருமழைப் புலவர்
பொ. வே. சோமசுந்தரனார்

சென்னைப் பல்கலைக் கழக வித்துவான் முதனிலைத் தேர்வுக்குப் பாடமாக வைக்கப்பட்டிருக்கும் கல்லாடத்தின் முதல் 30 பாடல்கட்கு, புலவர் பொ. வே. சோமசுந்தரனார் எழுதியுள்ள உரை சேர்க்கப்பட்டிருப்பதால் மாணவர்க்குப் பெரிதும் பயன்படும். ரூ. 12 50

**திருவாசகம்–நீத்தல் விண்ணப்பம் உரை**

—புலவர் ந. ரா. முருகவேள், எம். ஏ., பி. ஓ. எல்.

திருவாசகத்தின் ஒரு பகுதியாகிய நீத்தல் விண்ணப்பம் பொழிப்புரை, விளக்கவுரைகளுடன் திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்களின் ஆங்கில முன்னுரையுடனும் வெளிவந்துள்ளது. ரூ. 4 00

**மதுரை இருபெரும்புலவர்கள்**

(மாம்பழக் கவிச்சிங்க நாவலரும், கந்தசாமியாரும்)
—புலவர் இரா. இளங்குமரன் ரூ. 4 00

## பிறபதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

**பெரிய புராண ஆய்வுரை - இரண்டாந் தொகுதி–அப்பர்**

ஆசிரியர்: பேராசிரியர் வித்துவான்,
மறைத் திருநாவுக்கரசு அவர்கள். ரூ. 10 00

**தேசியம் வளர்த்த தமிழ்**

ஆசிரியர்: திரு. கா. திரவியம், ஐ.ஏ.எஸ். ரூ. 8 50

**அருள்மிகு கொளஞ்சியப்பர் பிள்ளைத் தமிழ்**

ஆசிரியர்: தவத்திரு. தி. செ. முருகதாச அடிகள் ரூ. 3 00

பதிவு எண் : M. 4899

தொலைபேசி: 440705

ஸ்ரீ வெங்கடேஸ்வரா தாள் விற்பனையாளர்

(SRI VENKATESWARA PAPER TRADERS)



ஹூக்லி அச்சு மை

விற்பனையாளர்கள் :

*Agents for*

**HOOGHLY PRINTING INKS**



89/2, அண்ணா சாலை,

தேனாம்பேட்டை :: சென்னை-600 018.



தொலைபேசி: 440705

வேல்முருகன் தாள் விற்பனை நிலையம்

(VELMURUGAN PAPER MART)



தமிழ்நாடு அச்சு மை

விற்பனையாளர்கள் :

*Agents for*

**TAMIL NADU PRINTING INKS**



89/2, அண்ணா சாலை,

தேனாம்பேட்டை :: சென்னை-600 018.

அப்பர் அச்சகம், சென்னை-600 001.